ஶ்ரீ:

ஸபையின் ஏழாவது வெளியீடு

# ஆஶௌசநிர்ணயம்

ஆசிரியர்

ப்ரம்ஹஶ்ரீ சங்கர நாராயண ச்ரௌதிகளின் சிஷ்யன்

**ப்ரம்ஹஶ்ரீ. முரளீகிருஷ்ண ச்ரௌதிகள்**



வெளியீடு

வித்வத்ஸபை (ப.எ.1543/2003) மூலமாக இயங்குகிற

**வேதசாஸ்த்ரசிக்ஷாநுஸந்தானகேந்த்ரம்**

கலியுகவருடம் ருக0கூ (ஆ.வ.2008)

ஶ்ரீ:

ஸபையின் ஏழாவது வெளியீடு

# ஆசௌசநிர்ணயம்


ஆசிரியர்

ப்ரம்ஹஸ்ரீ சங்கர நாராயண ச்ரௌதிகளின் சிஷ்யன்

**ப்ரம்ஹஸ்ரீ. முரளீகிருஷ்ண ச்ரௌதிகள்**





வெளியீடு

வித்வத்ஸபை (ப.எ.1543/2003) மூலமாக இயங்குகிற

**வேதசாஸ்த்ரசிக்ஷாநுஸன்தானகேந்த்ரம்**

கலியுகவருடம் ருகO௯ (ஆ.வ.2008)

Book Name : ĀŚHAUCHA NIRṆAYAM

Author & Editor : R. Muralikrishna Srowthigal

Publisher : Vedashastra Research Centre
(Under Vidvath Sabha,Chennai-73.Regd.No.1543/2003)

Printer : Sri Maruthy Laser Printers
Chennai – 600 014.

First Edition : November 2008

Copies : 1000 Rs. 50 00

 Rs. 50-00

*Book available at :*

**SRIMAD BHAVANAM**
7, Radheshyam Avenue, Rajakilpakkam, Chennai-600073.
Phone- 044- 22280524, Cell- 9444115980
E-mail : drsrowthigal@yahoo.com. vidvathsabha@gmail.com.

Type Setting : Narendran & Venkatachalam

Font & Size : Baraha - 14 point

Book Size : 5.5" x 8.25"

Matter Size : 4.25" x 7.5"

Pages : 2+2+22+70= 96.

Language : Tamil

Paper : 80 GSM Maplitho



## Publisher Note

In continuation with our efforts to bring the treasure of the Vedashastras to the world, we are happy to release the present book entitled ĀŚHAUCHA NIRṆAYAM

Our sincere thanks to **Bramhasri Acharya R.Muralikrishna Srowthigal** for his undying spirit and great efforts which went into the completion of this book.

We also thank all our patrons for their support and hope to get the same for all our future publications.

**Vedashastra Research Centre**
(Under **Vidvath Sabha**, Chennai -73.)

****************************************************************

## From the Author

I would like to thank all the Publishers and Editors who made efforts towards presenting the valuable Vedashastras which is essential for mankind.

I also thank the donor's who stood as the pillars and gave support to publish the great teachings of the Vedashastras.

**Bramhasri Acharya**
**R.Muralikrishna Srowthigal**

## अभ्यर्थना

तैलाद्रक्षेज्जलाद्रक्षेद्रक्षेच्छिथिलबन्धनात्।
मूर्खहस्ते न दातव्यमेवं वदति पुस्तकम्॥

भग्नपृष्ठकटिग्रीवस्तब्धदृष्टिरधोमुखः।
कष्टेन लिखितो ग्रन्थः यत्नेन परिपाल्यताम्॥

विद्या ह वै ब्राह्मणमाजगाम तवाहमस्मि त्वं मा पालयस्व।
अनर्हते मानिने नैव मा दा गोपाय मा श्रेयसी तेऽहमस्मि॥

विद्यया सार्धं म्रियेत न विद्यामूषरे वपेत्॥

सम्पादकः

## முன்னுரை:-

धर्मशास्त्रं सदा पठ्यं ब्राह्मणैः शुद्धमानसैः ।

वेदवत् पठितव्यं च श्रोतव्यं च दिवानिशम् ॥

श्रुतिहीनाय विप्राय स्मृतिहीने तथैव च ।

दानं भोजनमन्यच्च दत्तं कुलविनाशनम् ॥

तस्मात् सर्वप्रयत्नेन धर्मशास्त्रं पठेद् द्विजः ।

श्रुतिस्मृती तु विप्राणां चक्षुषी द्वे विनिर्मिते ।

काणस्तत्रैकया हीनो द्वाभ्यामन्धः प्रकीर्तितः ॥ इति व्यासस्मृतौ ॥

தர்மசாஸ்த்ரம் ஸதா பட்யம் ப்ராஹ்மணை:
சுத்தமானஸை:|
வேதவத் படிதவ்யம் ச ச்ரோதவ்யம் ச திவாநிசம் ||
ச்ருதிஹீனாய விப்ராய ஸ்ம்ருதிஹீனே ததைவ ச |
தானம் போஜனமன்யச்ச தத்தம் குலவிநாசநம் ||
தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன தர்மசாஸ்த்ரம் படேத் த்விஜ:
ச்ருதிஸ்ம்ருதீ து விப்ராணாம் சக்ஷுஷீ த்வே விநிர்மிதே|
காணஸ்தத்ரைகயா ஹீனோ த்வாப்யாமந்த: ப்ரகீர்த்தித: ||

இவைகளின் கருத்து ப்ராஹ்மணன் வேதத்தை படிப்பது போல் தர்மசாஸ்திரத்தையும் நித்யமும் படிக்கவேண்டும். கேட்கவாவது வேண்டும். வேதம் ஸ்ம்ருதிகள் இவைகளை அறியாத ப்ராஹ்மணனுக்கு கொடுத்த தானம், போஜனம் முதலியவைகள் வீண். ஆகையால் ப்ராஹ்மணன் முயற்சி செய்து தர்ம சாஸ்திரத்தை படிக்க வேண்டும். வேதமும் ஸ்ம்ருதிகளும் ப்ராஹ்மணர்களுக்கு இரு கண்கள். அவைகளுள் ஒன்றில்லாதவன் ஒற்றைக்கண்ணன். இரண்டுமில்லாதவன் குருடன் எனப்படுவான். இவ்வாறு ஸ்ம்ருதிகளில் தர்மசாஸ்திரத்தின் முக்கியத்துவம் கூறப்பட்டுள்ளது.

முதலில் கூறியது போல் தர்மசாஸ்திரத்தில் வாழ்க்கையின் எல்லா அம்சங்களும் நேர்மையாகவும் நெறியுடனும் கடைபிடிக்க வேண்டிய முறைகள் கூறப்பட்டுள்ளன. சிறுவயதில் என்ன படிக்க வேண்டும். விவாஹம் யார் யாருடன், செய்து கொள்ள வேண்டும். என்ன தொழில் செய்ய வேண்டும். கலியுகத்தில் நாஸ்திகம் வலுத்ததால் தர்மசாஸ்திரம் கூறிய வழி பிழைப்புக்கு உகந்ததாக இல்லாவிடில் ஆபத்தர்மமாக என்னென்ன தொழில்கள் அல்லது வியாபாரம் செய்யலாம். எவை தோஷமற்றவை. தோஷமுள்ளதைச் செய்தால் அதற்கு பரிஹாரமும், தெரியாமல் செய்த தவறுக்கு பரிஹாரமும், அப்படியும் தெரிந்து செய்தால் பரிஹாரமும் அதிகமாய்ச் செய்யும் படியும் கூறப்பட்டுள்ளது. தவறு என்று தெரிந்து பலமுறை செய்தால் அதற்கு பரிஹாரம் செய்யமுடியாது என்றும் உள்ளது.

स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः।

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர:

என்று கீதாவாக்யம். எல்லோரும் அவரவர்களுடைய வர்ணத்திற்கு தகுந்தபடி வர்ணத்திற்குரிய தொழிலை, கடைமையைச் செய்தால் கார்ய ஸித்தியை அடைவார்கள் என்பது பொருள். அதன்படி அந்தந்த வர்ணத்தாருக்கு என்னென்ன கடமை என்பவை தர்மசாஸ்திரத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக ப்ராஹ்மணனுக்கு விதிக்கப்பட்ட கடமைகள் ஆறு. 1. அத்யயனம் செய்தல். (படித்தல். 5வயது முதல் 15வயது வரை) 2. அத்யாபனம் செய்தல். (வேதத்தைக் கற்றுக் கொடுத்தல்) 3. யாகம் ஹோமம் முதலியவைகளைச் செய்தல். 4 யாகம் முதலியவைகளை ராஜாக்கள் முதலியவர்களுக்குச் செய்வித்தல். 5. தானம் கொடுத்தல். 6. தானப்பொருளை பெற்றுக்

கொள்ளுதல் (ப்ரதிக்ரஹம் செய்தல்). க்ஷத்ரியர்களுக்கும் வைச்யர்களுக்கும் மூன்று கடமைகள் தான் கூறப்பட்டுள்ளன. அதாவது வேதத்தை அத்யயனம் செய்வது, யாகம் முதலியவற்றைச் செய்வது. தானம் கொடுப்பது. அத்யாபனம் செய்தல், யாகம் செய்வித்தல், தானம் வாங்குதல் என்கிற மூன்றும் ப்ராஹ்மணனுக்கு பிழைப்புக்குரிய சாதனங்கள். ஆகையால் இந்த மூன்றும் இல்லாமலேயே பரம்பரை சொத்து இருந்தால் வாழலாம். யாஜனம், ப்ரதிக்ரஹம் இரண்டும் கட்டாயமில்லை. அத்யாபனம் பணம் வாங்காமல் செய்வது உயர்ந்தது. ஆகையால் தான் உபநிஷத்தில்

स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यम् ஸ்வாத்யாய-ப்ரவசனாப்யாம் ந ப்ரமதிதவ்யம். என்று கூறப்பட்டுள்ளது. வேதத்தை தினமும் சொல்லவேண்டும். பிறருக்கு சொல்லிக் கொடுக்கவும் வேண்டும். சம்பளம் பெற்று வேதத்தை

சொல்லிக் கொடுப்பது वेदविक्रयी என்று தோஷமாகச் சொல்லப்பட்டுள்ளது.

இவ்வாறு தர்ம சாஸ்திரம் மனிதனை இவ்வுலகிலும் பரலோகத்திலும் இன்புற்றிருக்க பல வழிகளை நமக்கு எடுத்துக் கூறுகிறது. ஆகையால் எல்லோரும் விசேஷமாக ப்ராஹ்மணன் தர்ம சாஸ்திரத்தை தெரிந்து கொள்ள வேண்டும். அதில் நாற்பது ஸம்ஸ்காரங்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளது. அவை கர்பாதானம் முதல் அந்திமக்ரியை வரையில் செய்யக்கூடிய வேத சாஸ்திர சம்மதமான காரியங்கள். அவைகளுள் கர்ப்பாதானம் என்பது ஜன்மா எடுப்பதற்கு காரணமான முதல் ஸம்ஸ்காரம். அதுமுதல் உபநயனம் வரையில் உள்ள 8 கர்மாக்களும் தகப்பனாரால் செய்யப்பட வேண்டியவை. உபநயனத்திற்கு பின் ஆசார்யன் மூலம் காண்டவ்ரதங்களும் ஸமாவர்த்தனமும் செய்யப்பட வேண்டியவை. பிறகு விவாஹம் முதல்

சோமயாகம் வரை உள்ள ஸம்ஸ்காரங்கள் ஒவ்வொரு கிருஹஸ்தனும் செய்ய வேண்டியவை யாகும். கடைசியாக மரணம் ஏற்பட்டவுடன்

"पुरुषाहुतिर्ह्यस्य प्रियतमा" என்ற வசனப்படி இந்த சரீரத்தையே ஆஹுதியாக அக்னியில் அர்ப்பணம்

செய்ய வேண்டும். இதை அந்திமக்ரியை, और्ध्वदेहिकम् என்றும் சொல்வர். இதை செய்ய தகுதியுடையவன்

औरसपुत्र: தனக்குப் பிறந்த மகன்.

இந்த பித்ருயக்ஞத்தை செய்ய புத்ரன்தான் கடைமைப் பட்டவன். அவன் இல்லாவிடில் என்ன செய்வது என்ற கேள்வி எழும். அதைத்தெரிந்து கொள்ள தர்மசாஸ்திரம் தான் ஆதார நூலாகும். இதை பல ரிஷிகள் பலவாறாகக் கூறியுள்ளார்கள்.

जीवतोः वाक्यकरणात् प्रत्यब्दं भूरिभोजनात् ।

गयायां पिण्डदानाच्च तस्मात् पुत्रस्य पुत्रता।

என்ற வசனப்படி உயிருள்ள வரையில் பெற்றோர் சொல்படி நடந்து, மரணத்திற்கு பிறகு ப்ரதி வருஷம் ச்ராத்தம் செய்வது, ஜீவத்திசையில் ஒரு தடவையாவது கயையில் ச்ராத்தம் செய்வது என்று மூன்று கடமைகளைக் கூறுவது தர்மசாஸ்திரம். மரணத்திற்கு முன் செய்யும் ஸம்ஸ்காரங்களில் அதிகம் சந்தேகம் ஏற்படுவதில்லை. அவைகள் தனிமனிதனைப்பற்றியவை. அவைகளுக்கு சாக்ஷியாக உறவினர்களும் சான்றோர்களும் இருப்பார்கள். ஆனால் மரணம் ஏற்பட்டால் சுபகர்மாவில் இருப்பதுபோல் உறவினர்கள் சாக்ஷியாக இருந்துவிட்டு விருந்துண்டு செல்வதற்கில்லை. மரணம் அடைந்தவரின் ஞாதிகள் ஏழு தலைமுறை. பிறகு இன்னும் ஏழு தலைமுறை வரையிலுள்ளவர்கள் தீட்டுக்கார்த்து தில தர்பணம் செய்யக் கடமைப்பட்டுள்ளார்கள்.

எவரெவர்களுக்கு எத்தனை நாள் தீட்டு, ஞாதிகள் அல்லாத மாமா, மாமனார் போன்றவர்களின் மரண விஷயத்திலும் தீட்டு உண்டு. பத்னி புத்ரன் இருந்தால் மாமனார் மரணத்தில் மூன்று நாட்கள் தீட்டு. அவ்விருவரும் இல்லாவிடில் 1 நாள் தான் தீட்டு போன்ற வேறுபாடுகள் கொண்ட ஆசௌச விஷயத்தை தெரிந்து கொள்வது மிகவும் கடினமானதால் முன்னோர்கள் "ஸ்ம்ருதி முக்தாபலம்" போல் பலநூல்களை எழுதி நமக்கு அனுக்ரஹித்துள்ளனர்.

விஞ்ஞான உலகில் மனிதன் இயந்திரத்திற்கு அடிமையாகி விட்டான். மின்சாரம் இல்லாவிடில் வாழ்க்கையே ஸ்தம்பித்துவிடுகிறது. இக்கலியில் தர்மசாஸ்திரத்தை படித்து புரிந்து கொள்ளும் தகுதி எல்லோருக்கும் ஏற்படாது. அது கலியுக தர்மம். கலியுகத்தில் எல்லோரும் தங்கள் மனம் போனபடி தர்மம் பேசுவார்கள் என்று ஸ்ம்ருதிகளுள் கூறப்பட்டுள்ளது. ஆகையால் சரியான தர்மத்தை புரிந்து கொள்ள "ஸ்ம்ருதிமுக்தாபலம்" "நிர்ணயஸிந்து" போன்ற பல புஸ்தகங்கள் இருந்தாலும் அதைப்படித்து தெரிந்து கொள்ள ஸம்ஸ்கிருதபாஷை ஞானம் மாத்திரம் போதாது.

சாஸ்திரஞானம், விசேஷமாக मीमांसाशास्त्रं धर्मविचारशास्त्रम् என்பதால் மீமாம்ஸாசாஸ்த்ரஞானமும் தேவையானது.

மூன்று நாள் தீட்டு யார்யாருக்கு, தீட்டுத்தர்ப்பணம் எப்பொழுது செய்யவேண்டும். வபனம் யாருக்கு உண்டு. ஸபிண்டீகரணம் செய்யும்விதம், பிள்ளையில்லாதவர்களுக்கு யார் கர்மா செய்யலாம் என்ற பல சந்தேகங்களை ஆதாரபூர்வமான நூலின் அடிப்படையில் வெளியிடுவது சுலபமான காரியமில்லை. வைதிகர்களும் 'நான் அபரம் செய்து வைப்பதில்லை' என்று சொல்லும் இக்காலத்தில்

அபரகார்ய ஸம்பந்தமான எல்லா ஸந்தேஹங்களுக்கும் விளக்கமான பதிலாக அமைந்த இந்த புஸ்தகமும் சாலச்சிறந்தது மாத்திரமல்ல. அவசியமானதுமாகும். இந்நூலை வெளியிட முயற்சி செய்த **ப்ரம்ஹஸ்ரீ முரளீக்ருஷ்ண ச்ரௌதிகளுக்கும்** அவருக்கு உறுதுணையாக நின்று புத்தகவடிவில் கொண்டுவரச்செய்த ஆஸ்திகர்களுக்கும் எனது வாழ்த்துக்களும் ஆசீர்வாதங்களும் உரித்தாகுக.

ஆசௌச காண்டத்திலும், ச்ராத்தகாண்டத்திலும் கூறப்பட்ட விஷயங்கள் மிகவும் கடினமானவை. இந்த இரண்டையும் விசாரித்து தீர்மானமாகச் சொல்லவல்ல தர்ம சாஸ்திரக்ஞர்கள் அரிதாகிவிட்ட இந்தகாலத்தில் ப்ரமாண பூர்வமான இந்த புத்தகம் தமிழில் வெளிவருவது ஆஸ்திக உலகத்திற்கு ஒரு வரப்ரஸாதமாகும். இந்நூலுக்கு முகவுரை எழுத ஸந்தர்ப்பம் அளித்த **ப்ரம்ஹஸ்ரீ முரளீகிருஷ்ண ச்ரௌதிகளுக்கு** எனது க்ருதஞதையை தெரிவித்துக் கொள்கிறேன். ஆஸ்திகர்கள் இப்புத்தகத்தை வாங்கிப்படித்து அனுஷ்டானங்களை சரிவரச்செய்து பித்ருக்களின் ஆசிகளை பெற்று தீர்காயுஷ்மான்களாக இருந்து என்றும் தர்மத்திலும் தர்மசாஸ்திரத்திலும் பற்று குன்றாதவர்களுமாக இருக்கவேண்டும் என்று எல்லாம்வல்ல ஸர்வேச்வரனை ப்ராத்திக்கிறேன்.

धर्मो रक्षति रक्षितः। धर्मो जयति नानृतम्।

॥ शुभं भूयात् ॥

இப்படிக்கு

**E. பாலஸுப்ரம்ஹண்ய சாஸ்த்ரிகள்**

Retd. Mimamsa Prof. Madras Sanskrit College

## முகவுரை

நமது ஹிந்து தர்மம் ஸனாதன தர்மம், அனாதியானது. அதன் ஆதாரம் வேதமாகும். வேதத்தை ஆதாரமாகக்கொண்டு இயங்குவதால் தான் ஹிந்து தர்மத்தின் சிறப்பு இன்றைக்கும் குன்றாமல் இருக்கிறது. வேதம் எதை போதிக்கிறதோ அது நாம் மதிக்க வேண்டிய கட்டளையாகும், அதுவே தர்மமாகும். தர்மத்தை அனுஷ்டிப்பவனுக்கு ஒருபோதும் தீங்கு விளையாது.

நாம் தர்மத்தை சரியாக அறிந்துகொள்ள மஹர்ஷிகள் பல நூறு ஸ்ம்ருதி க்ரந்தங்களை இயற்றியுள்ளார்கள். ச்ருதியையும் அதை ஆதார மாகக்கொண்ட ஸ்ம்ருதிகளையும் பின்பற்றி நடக்க வேண்டும் என்பது இயற்கை இவ்வுலகத்துக்கு அமைத்த நியதி.

இயற்கை அமைத்த நியதிக்குட்பட்டு நடப்பவன் ப்ரக்ருதி- புருஷபரிஞானம் பெற்று (பரதத்வத்தை அறிந்து) இச்சை, க்ரியை முதலியவைகளைக் கடந்து நிற்பான், அவனை இவ்வுலகம் ப்ரம்ஹஞானி, முக்தன் என்றெல்லாம் போற்றும், அந்த மாதிரியான வ்யக்தி பல ஆயிரம் வருடங்களில் ஏதொரு காலத்தில் எங்கொ, கோடியில் ஒருவன்தான் ஜனிப்பான், இப்படிப்பட்ட விசேஷ ஸித்தியை அடைவதற்கு வேதம் போதித்ததும், மஹர்ஷிகள் வகுத்துக் கொடுத்ததுமான தர்மத்தின் அனுஷ்டானம் அத்யாவச்யம்.

தர்மானுஷ்டானத்திற்கு 1) தேச சுத்தி 2) கால சுத்தி 3) த்ரவ்ய சுத்தி 4) கர்த்ரு சுத்தி இவைகள் முக்ய அங்கமாகும். தேச சுத்தி என்பது- செய்யவிருக்கும் கர்மாக்களுக்கு உகந்த சுத்தமான ப்ரதேசமாகும், கோசாலை, ச்ரோத்ரியன் வசிக்கும் இடம், நதீ,

குளம், ஸமுத்ரம், கோவில், இவைகள் பரிசுத்தமாக பார்க்கக்கூடிய இடங்கள். அதாவது பரிசுத்தமான இந்த இடங்களின் புனிதத்தன்மை கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் மனிதஸமுதாயத்திற்கு உள்ளது.

அடுத்து கால சுத்தி- எந்த கர்மாவிற்கு எந்த காலம் ச்ருதியிலும் ஸ்ம்ருதியிலும் விதிக்கப்பட்டுள்ளதோ, அந்த கர்மாவிற்கு அது சுத்தமான காலமாகும். உதாஹரணம்- அநத்யயன தினங்களில் வேதாத்யயனம் செய்யக்கூடாது என்ற விதிமுறையினால் வேதாத்யயனத்திற்கு அநத்யயன தினங்களில் காலசுத்தி இல்லை என்பது புரிய வருகிறது. அமாவாஸ்யை, ஸங்க்ரமணம், க்ரஹணம் முதலிய விசேஷ காலங்களில் காலசுத்தியின் ஸௌக்ஷ்மம் அதன் மஹிமை கூர்ந்து கவனிக்கத்தக்கது.

த்ரவ்ய சுத்தி- ஒரு கர்மாவில் உபயோகிக்கப்படவேண்டியதாக விதிக்கப்படும் த்ரவ்யத்தின் ஸ்வரூபம், அளவு, தரம், த்ரவ்யத்தை சேகரிக்கும் (ஸம்பாதிக்கும்) முறை இவை அனைத்தும் யதோக்தமாக இருப்பின் த்ரவ்யசுத்தி ஒப்புக்கொள்ளப்படுகிறது.

கர்த்ரு சுத்தி- மனிதன் எப்பொழுதும் பாஹ்ய-ஆப்யந்தர சுத்தனாக இருக்க வேண்டும்; விசேஷமாக கர்மானுஷ்டான காலங்களில். (வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சமும் அனுஷ்டானமாகத்தான் அமையப்பெற்றிருக்கிறது என்பது கவனிக்கத்தக்கது) பாஹ்ய-ஆப்யந்தர சுத்தியுடன் கூடியவனுக்குத்தான் கர்மத்தின் பலன் கிட்டும், ஸ்நானம் முதலியவற்றால் ஏற்படும் சுத்தியை தக்க வைத்துக்கொள்ள வேண்டும்.

ஒரு கர்தாவானவன் சுத்தனாக இருந்துகொண்டு சுத்தமான த்ரவ்யங்களைக்கொண்டு சுத்தமான

ப்ரதேசத்தில் சுத்தமான விதிக்கப்பட்ட காலத்தில் கர்மாவை செய்யக்கடவன். இது சாஸ்த்ரோக்த விதி. இவ்விதியை மீறலாகாது.

இங்கு காலசுத்தியை மட்டும் கூர்ந்து கவனிப்போம். தேச-த்ரவ்ய-கர்த்ரு சுத்திகள் மனுஷ்ய யத்னத்திற்குட்பட்டவைகள். காலசுத்தி அப்படியல்ல. அது இயற்கை.

இயற்கை எப்போதும் சுத்தம்தான். ஆனால் இயற்கையான அந்த காலம் மனிதனின் வாழ்க்கையின் சில அம்சங்களின் எல்லைக்குட்பட்டு தழுவுவதால் அந்த மனிதனுக்கு கால சுத்தி கிட்டாது. சில சமயங்களில் மனிதனுக்கு காலசுத்தி இருக்காது என்பது நியதி. அந்த மாதிரியான ஸமயங்கள்- 1.ஜனனம் (குழந்தை பிறந்து 10.நாட்கள் வரையிலான காலம்) 2. மரணம் (ஒருவர் இறந்தது முதல் 10.நாட்கள் வரையிலான காலம்) 3. ருதுகாலம் (ஸ்த்ரீகளுக்கு விதிக்கப்பட்ட ரஜோதர்சனம் முதல் 4. நாட்கள் வரையிலான காலம்) 4. சந்த்ர ஸூர்ய க்ரஹணம் (க்ரஹணம் ஆரம்பித்து முடிவு வரையிலான காலம்)

முதல் மூன்று ஸந்தர்பங்களுக்கும் நான்காவதான க்ரஹண ஸமயத்திற்கும் வித்யாஸமுண்டு, முதல் மூன்று தனிப்பட்ட மனிதன் ஸம்பந்தப்பட்டது. நான்காவதான க்ரஹணம் ஒட்டு மொத்த உலகம் ஸம்பந்தப்பட்டது. ஆகையால்தான் அதை விசேஷ புண்யகாலம் என்று போற்றுகிறோம், க்ரஹண சமயத்தில் ஸ்நானம், ஜபம், ஹோமம், தானம், ச்ராத்தம் இவைகளை செய்யவேண்டும். என சாஸ்த்ரம் உபதேசிக்கிறது. க்ரஹண காலத்தை ஸாத்விகமான செயல்களால் கழிக்க வேண்டும். இல்லையேல் அச்சமயத்தில் நாம் செய்யும் செயல்களின் (க்ரஹணத்தில் செய்யத்தகாத) விளைவு நம்மை பலவாறு பாதிக்கும். ஆகையால் தான் அந்த

காலத்தில் தயாரிக்கப்பட்ட பதார்த்தங்களை உட்கொள்ளக்கூடாது என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். க்ரஹணத்திற்கு முன்பே தயாரித்த பக்வமான பதார்த்தமும் வர்ஜ்யம். அபக்வ த்ரவ்யங்களில் தர்பையைப்போட்டு க்ரஹணம் முடிந்தபின் அதை எடுத்து விட்டு உபயோகிக்கலாம்.

அடுத்து ஸ்த்ரீகளின் ருதுகாலத்தைப்பார்ப்போம். ஸ்த்ரீகளின் ரஜோதர்சனமென்பது ஒரு விதமான பாபத்தின் அனுபவிக்க வேண்டியதான பலன் ஆகும். முன்பொரு சமயம் ஸ்த்ரீகள் இந்த்ர ஸம்பந்தமான பாபத்தின் ஒரு அம்சத்தைப்பெற்றுக்கொண்டு, அதற்கு ப்ரதிபலனாக பல வரன்களை இந்த்ரனிடமிருந்து பெற்று தார்மிகமான ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில்தான் ஒவ்வொரு மாதமும் ஸ்த்ரீகளுக்கு ரஜோதர்சனம் ஏற்படுகிறது. ரஜோதர்சனம் முதல் 3.நாட்கள் தீவிரமான கட்டுப்பாடு விதிக்கப்பட்டு, 4.வது நாளில் அந்த பாபத்தின் தாக்கத்திலிருந்து விடுபட அவகாசமும் தரப்பட்டு, 5.வது நாளில் பூர்ணமான சுத்தி நிர்ணயிக்கப்படுகிறது. ரஜோதர்சனம் பாபத்தின் அறிகுறியானதால் அதன் கதிர்கள் மற்றவர்களை பாதிக்காமலிருப்பதற்கு அப்பெண்மணி தன்னை எந்த செயல்களிலும் ஈடுபடுத்திக்கொள்ளாமல் தனியாக இருக்க வேண்டும் என்று வேதம் போதிக்கிறது. ரஜஸ்வலைக்கு பரிமாறி மீதமுள்ள அன்னத்தை புஜிப்பவனுக்கு பல தோஷங்களும் அதன்மூலம் பல வ்யாதிகளும் உருவாகும் என்றும், ஆபிசாரங்கள் உடனே பலித்துவிடும் என்றும் மஹர்ஷிகளின் ஸ்ம்ருதிவாக்யம், சாப்பிட்டுக் கொண்டிருப்பவர்களையோ சாப்பிடும் பதார்த்தங்களையோ ரஜஸ்வலை பார்கலாகாது. அப்படி பார்த்து விட்டால் பார்க்கப்பட்டவருக்கு

வயிறு சம்பந்தமான வ்யாதி வரும் என்று வேதம் போதித்ததை ஆயுர்வேதமும் தர்மசாஸ்த்ரமும் உறுதி படுத்துகின்றன. ஆனால் இக்காலத்தில் உடலிலிருந்து அழுக்கு வெளியேறுகிறது, அது எப்படி தீட்டாகும்? என விதண்டாவாதம் புரிந்து கொண்டு ரஜஸ்வலைகளே சமைக்கிறார்கள், பரிமாறுகிறார்கள். அவர்களுடன் மற்றவரும் ஆஹார-விஹாரங்களை செய்து கொள்கிறார்கள். கேட்டால் விஞ்ஞானம் வளர்ந்துவிட்ட இக்காலத்தில் தீட்டாவது, பாபமாவது, தோஷமாவது, என அங்கலாய்க் கிறார்கள். வெளிநாட்டவர் அணுகுமுறை மோகத்தில் மதிமயங்கிய ஸ்த்ரீகளின் கூட்டத்தின் எண்ணமும் செயல்பாடுகளும் இந்நாட்டை வெகுவாக பாதிக்கின்றன என்று சொன்னால் அது மிகையாகாது என பல ஆயிரம் அறிஞர்களின் அனுபவபூர்வமான வாதம்.

அடுத்து மரணம். இது உலகத்தில் தவிர்க்க முடியாதது. இயற்கையானது. இது அகாலத்திலும் சம்பவிக்கும். அகாலத்தில் சம்பவிக்கும் மரணம் அனாசாரத்தால் வருவது என்பது ரிஷிவாக்யம். अकालमरणं प्राप्तमनाचाराद्भविष्यति (गौतमः) மரணம் அடைந்தவருக்கு அவரின் ஸந்ததியினரும், தாயாதிகளும், (உறவினரும்) 10.நாட்கள் தீட்டுக்காத்து உதகதானம் ச்ராத்தம் இவைகளைச்செய்ய வேண்டும். மரணமடைந்தவரின் உறவைப்பொருத்து தீட்டு நாட்களில் வித்யாஸமுண்டு. மரணமடைந்தவரின் ஸந்ததியும் தாயாதிகளும் ப்ரேதஸம்ஸ்காரத்தில் அதிகப்பங்கு வகிப்பதால் சவஸ்பர்சம், அதன்காற்றை ச்வாஸிப்பது முதலியவைகளால் ஸங்கர தோஷத்திற் குள்ளாவார்கள், அந்த ஸங்கர தோஷமானது (infection) மற்றவருக்கு பாதிப்பை ஏற்படுத்தாமலிருக்க தீட்டுக்கார்க்க வேண்டியதாக

விதிக்கப்பட்டுள்ளது. தீட்டுக்காரப்பது என்பது மற்றவிஷயங்களில் ஈடுபடாமலிருப்பது என்றோ, குறிப்பிட்ட (விதிக்கப்பட்ட) சில கார்யங்களை மட்டும் செய்வது என்றோ அர்த்தமாகும். சவஸ்பர்சம் முதலிய ஸங்கர தோஷங்கள்- கோமயத்தால் கையை அலம்புவது, வெண்கடுகை கையில் தேய்துக்கொள்வது, வெண்கடுகை நெருப்பில் போட்டு அதன் புகையை நுகர்வது, வேப்பங்கொழுந்தை மெல்லுவது முதலிய செயல்களால் சமனமாகும் என்பது பல்வேறு தேசாசாரங்களில் காணப்படும் வ்ருத்தானுபவம்.

கடைசியாக ஜனனம்- ஒரு குழந்தை பிறந்தால் அதன் பெற்றோர்களுக்கும், தாயாதிகளுக்கும் 10-நாள் வ்ருத்தி. இங்கும் உறவைப்பொருத்து வித்யாசமுண்டு. இந்த வ்ருத்தியானது குழந்தையையும், அதன் தாயாரையும் பலவிதமான பாஹ்ய தோஷங்களிலிருந்து காப்பாற்றுவதற்காக அமைக்கப்பட்டது எனக்கருதலாம். பிறந்த குழந்தையின் சரீரம் மிகவும் ம்ருதுவாக இருக்குமாதலால் வெளியுலகின் வாதாவரணம் சிசுவை பாதிக்காமலிருக்க யுகயுகமாக இவ்வாறான கட்டுப்பாடு கையாளப்பட்டு வருகிறது.

மேற்கூறிய சமயங்களில் எப்படி நடந்து கொள்ள வேண்டும், மற்ற சமயங்களில் எப்படி இருக்க வேண்டும், என்பதை சாஸ்த்ரம் போதிக்கிறது. சாஸ்த்ரம் கூறும் மார்கத்தில் செல்பவன் தனக்கும் ச்ரேயஸ்ஸை ஏற்படுத்திக்கொண்டு. அவன் ஸமுதாயத்திற்கும், இந்த தேசத்திற்கும் வளர்ச்சியைக் கொடுக்கிறான். அப்படிப்பட்டவனுக்கு மண்ணுலகிலும், விண்ணுலகிலும் உயர்ந்த இடம் அளிக்கப்படுகிறது.

நம் வைதிகமதத்தில் கர்பாதானம் முதல் ப்ரேதகார்யங்கள் வரையிலான கர்மாக்கள்

வேதத்தால் உபதேசிக்கப்பட்டு மஹர்ஷிகளால் வகுத்துக்கொடுக்கப்பட்டிருக் கின்றன. அவையனைத்தும் நமது சரீர ஸம்ஸ்காரத்திற்காக அமைந்துள்ளன.

மனு கூறுவதாவது : ---

वैदिकैः कर्मभिः पुण्यैः निषेकाद्यैर्द्विजन्मनाम्।

कार्यः शरीरसंस्कारः प्रेत्य चेह च पावनः॥

பிறப்பதற்கு ஹேதுவான கர்பாதானம் முதல், பிறந்து வளர்ந்து அந்திம க்ஷணம் வரை சரீரத்தை ஸம்ஸ்கார கர்மாக்களால் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். வாழ்நாளில் பல சாதனைகளை புரிந்து, அநேக தர்மங்களைச் செய்த அந்த சரீரத்தை மரணத்திற்குப் பிறகு அப்படியே தூக்கி எறிந்து விடலாகாது. அதற்கு சாஸ்த்ர விதிப்படி ஸம்ஸ்காரம் செய்து தஹனம் முதல் செய்ய வேண்டும். மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் ஒரு ந்யாயமுண்டு- भूतोपयोगि भविष्यदुपयोगि वा यद् द्रव्यम् तदेव संस्कारमर्हति இதன் பொருள்- கடந்த காலத்திலோ வருங்காலத்திலோ எது உபகாரமாக இருந்ததோ அல்லது இருக்குமோ அதற்கு ஸம்ஸ்காரம் செய்யனும். ஸம்ஸ்காரத்தினால் அதன் ஆத்மாவில் ஓர் அபூர்வ சக்தி உண்டாகும். பெற்றோர்கள் தன் குழந்தை வருங்காலத்தில் உபகாரமாக இருக்கும் என்பதற்காக அதற்கு ஜாதகர்ம முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்து அதன் ஆத்மாவில் ஒரு வைதிக சக்தியை உண்டாக்குகிறார்கள். அந்த சக்தி அக்குழந்தைக்கு வாழ்க்கையை வெற்றிகரமாக அமைக்க உதவுகிறது. அவ்வாறே கடந்த காலத்தில் தன் பெற்றோர்கள் தனக்கு பல உபகாரங்கள் செய்திருக்கிறார்கள்

என்பதை எண்ணி மகனும் பெற்றோர்களின் மரணத்திற்குப் பிறகு அவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்து பித்ரு கார்யங்களைச்செய்ய வேண்டும். மரணத்திற்குப் பிறகும் ஜீவயாத்ரை உண்டென்றும் மறுபிறவி உண்டென்றும் சொல்லுகிற நம் ஸனாதன தர்மத்தில் இந்த ஸம்ஸ்காரம் அத்யாவச்யமாக பார்க்கப்படுகிறது. ஆகையால் இந்த ஸம்ஸ்காரங்களின் வலிமை புரிந்து கொள்ளக்கூடியதே.

உலகம் முழுவதையும் சுகத்தோடு வாழவைப்பதற்காக வேதமாதா கூறும் தர்மங்கள் எல்லோருக்கும் எல்லா காலங்களிலும் ஹிதமானவை. அதை அனுஷ்டானம் செய்யாததால் வரும் ஹானி நமக்குத்தானே தவிர வேதத்திற்கல்ல. தர்மத்தை அனுஷ்டானம் செய்யாமலிருப்பதும், செய்யக்கூடாது என்று நிஷேதிக்கப்பட்டதை செய்தலும் பாபமாகும். பாபிகளோடு ஸஹவாஸம் வைப்பதும் பாபமாகும். பாபத்தின் பலன்களில் வ்யாதியும் ஒன்று. வ்யாதிகள் பலவகையாகும். அவை ஒரு மனிதனிடமிருந்து இன்னொரு மனிதனை தொற்றிக்கொள்ளும் என்று அஷ்டாங்க ஹ்ருதயத்தில் வாக்படாசார்யர் கூறுகிறார்;-

कुष्ठं ज्वरश्च शोफश्च नेत्राभिष्यन्द एव च।
औपसर्गिकरोगाश्च सङ्क्रामन्ति नरान्नरम्॥

மேலும் ரோக பரமாணு என்கிற அணுப்புழுக்கள் ரோகியின் சரீர ஸ்பர்சம், மூச்சுக்காற்று, சேர்ந்து சாப்பிடுதல், வஸ்த்ரம் படுக்கை முதலியவை மூலம் மற்றவர்கள் மீது பரவுகின்றனவென்றும் கூறுகிறார். வ்யாதிகள் கண்ணுக்குப்புலப்படாமல் ஸங்க்ரமிப்பது எப்படியென்றால்? ரோக பரமாணுக்கள் உயிருள்ளவை. அவை ஸூக்ஷ்மமானவை. ஆகையால் கண்ணுக்குப் புலப்படாமல் பரவுகின்றன என்கிற தத்வம் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆங்கில

வைத்ய ஸயன்ஸின்படி ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிற ஜெர்ம்ஸ் (germs) நுண்ணிய உயிர் ப்ராணி தத்வத்தையே நமது ஆயுர்வேத நூல்கள் பரமாணுப்பூச்சியாக ஒப்புவது நிதர்சனமாகிறது.

நமது வர்ணாச்ரம ஆசார அனுஷ்டானங்களுக்கு ஸயன்ஸ் ரீதியிலும் விசேஷ மஹிமையிருப்பதை பல நிபுணர்கள் நிரூபித்திருக்கிறார்கள். நம்முடைய சுத்தி, அசுத்தி கொள்கையும், ஆசாரங்களும் கண்ணுக்குப்புலப்படாத அணுப்ராணிகளின் ஸம்பந்த அடிப்படையில் உபதேசிக்கப்பட்டிருக் கின்றன. ஓரிடத்திலுள்ள புஷ்பத்திலிருந்து அதன் வாஸனை வெகுதூரம் பரவுகிறது. அந்த புஷ்பத்திலிருந்து வாஸனை அணுக்கள் ஏராளமாகக்கிளம்புகின்றன. அவை பரவுகின்றன. இம்மாதிரி ஸகல வஸ்துக்களிலிருந்தும், மனிதர் முதலிய ஸகல ப்ராணிகளிடமிருந்தும் பரமாணுக்கள் அதன் குண தோஷத்திற்கேற்றபடி வெளிக்கிளம்பிப் பரவுவது இயற்கையாயிருக்கிறது. இதை நமது ஆயுர்வேதம் உறுதிப்படுத்துகிறது.

வேதமோ உபவேதமான ஆயுர்வேதமோ தர்மசாஸ்த்ரம் முதலிய ஸ்ம்ருதிகளோ என்னதான் போதித்தாலும் இந்த நவீன விஞ்ஞான காலத்தில் எதற்கும் விஞ்ஞான ரீதியில் ஆதரவு காட்டாத வரையில் அதில் கௌரவபுத்தி ஏற்படுவதில்லை. நமது வர்ணாச்ரம ஆசார விதிகளும், நமது சுத்தி முறைகளும் இந்த அணு ப்ராணி தத்வ அடிப்படையில் மிகுந்த அர்த்த புஷ்டியுள்ளவை என்பதை பல ஆராய்ச்சிகள்மூலம் அறிஞர்களும் விஞ்ஞானிகளும் புரிந்து, ஒப்புக்கொண்டு கட்டுரைகள் மூலம் விளக்கியுள்ளார்கள். ப்ரக்ருதத்தில் மேற்கூறிய ஸமயங்களில் (ஜனன-மரண-ருதுகாலங்களில்) நாம் அனுஷ்டிக்கும் ஆசௌசம் சுத்திமுறை போன்ற ஆசாரங்கள் வெறும் மூடநம்பிக்கையல்லவென்றும் இந்த அணு

தத்வத்தின்படி மிகுந்த அர்த்தமுள்ள அவச்ய கார்யங்களென்பதையும் ஆங்கில வைத்ய நிபுணர் ஒருவர் கொண்டாடியிருப்பதைச் சிறிது பார்ப்போம்.

## Dr.King I.M.S.சொல்லுகிறார்

பல வருடங்களுக்கு முன் நமது இந்தியா கவர்ன்மெண்டில் ஸானிடரி கமிஷனராக பெரிய பதவி வகித்து வந்த கர்னல் டாக்டர் கிங்க் ஐ. எம். எஸ் (Dr.King I.M.S.) என்ற மேதாவி, ஆர்யர்களின் ஆசாரங்கள் ஸுகாதார ரீதியில் மிக்க உன்னதமாக விளங்குகின்றன என்பதை அநேக உதாஹரணம் மூலமாக விளக்கி ஓர் வ்யாஸம் எழுதினார். அது மதுரை தமிழ்ச்சங்கப் பத்திரிகையான "செந்தமிழ்" என்ற பத்திரிகையில் தொடர்ந்து ப்ரசுரிக்கப் பட்டிருப்பதை யாவரும் பார்க்கலாம். (செந்தமிழ் 9.வது ஸம்புடம்) அவர் ஆர்யர்களின் ஆசாரமுறை மூடநம்பிக்கை பொருந்தியதல்லவென்றும், விஞ்ஞான தத்வ ரீதியில் விமர்சித்தால் மிகுந்த ஸுகாதாரம் பொருந்தியவையென்றும், ஆர்யர்களின் ஆசாரங்கள் அணு அல்லது நுண்ணிய ஜீவப்ராணி (ஜெர்ம்ஸ்) ப்ரசாரத்தை அடிப்படையாகக்கொண்ட உயர்ந்த விதிகளென்றும் விரிவாக விளக்கியுள்ளார். முக்யமாக ஜனன-மரண-ருதுகால ஸம்பந்தமான ஆசௌசம் சுத்திமுறைகளை பலமாக ஆதரிக்கிறார். அவருடைய வார்த்தைகளை அப்படியே இங்கு சிறிது எடுத்து எழுதுகிறோம்.

அவர் கூறுவதாவது : ----

"முன்காலத்தில் மத ஸம்பந்தமான விதிகளும், ஸுகாதார விதிகளும் ஒன்றாகவே பிணைக்கப் பட்டிருந்தன. ரோககாரகமும் ரோகநிவாரகமுமான ஆசார ரஹஸ்யங்களை ஆர்யர்களே அறிந்து சொல்லக்கூடியவர்களாயினர். ஆரோக்ய சாஸ்த்ர விதி நிஷேதங்கள் நித்ய நைமித்திக வைதிக

கர்மாக்களோடு பிரிக்கவொண்ணாத விதமாகப் பிணைந்து கிடந்தன.''

''வ்யாதியானது நுண்ணிய உயிருள்ள பூச்சிகளினால் உண்டாகிறது. உயிருள்ள வஸ்து ஒன்று இருக்கிறதென்றும், அதனால் வ்யாதிகள் பரவுகின்றனவென்றும் ஸித்தாந்தத்தை அனுஸரித்தே ஆர்யர்கள் ஸுகாதாரச் சட்டங்களை ஏற்படுத்தியுள்ளார்கள்.''

மேலும் டாக்டர் கிங்க் கூறுவதாவது : ---

''ஆதலால் ஆர்யர்கள் ஆடைகள், ஆஹாரங்கள், ஆசௌசமுள்ளவனுடன் கலப்பு இவைகளைப் பற்றி விவரமாகக் கட்டளையிட்டிருக்கிறார்கள்.''

''ப்ரேதங்கள் முதலியவைகளிலிருந்து தொத்து வியாதிக்கு இடமான, அதாவது ஒருவனிடமிருந்து மற்றொருவனிடம் ஒட்டிக் கொண்டு வியாதியை உண்டாக்கக் கூடிய வஸ்துக்களின் ஸம்பந்தம் எங்கு ஏற்பட்டு விடுமோ என்று ஆர்யர்கள் மிகுந்த பீதியுள்ளவர்களாயிருந்தார்கள். ச்ரம ஸாத்யமான ஸ்நான விதிகளும், கழுவிச்சுத்தி செய்யும் முறைகளும், பிறகு ஸூதகம் காக்கும் விதியும் ப்ரயோஜனமற்ற வெறும் சடங்கு முறைகளென்று நினைத்து விடக் கூடாது. ஆசௌச க்ரம நிர்ணய மும் அதற்குக் கால அளவும் ஏற்படுத்தியிருப்பதில் விசேஷ அர்த்தமிருக்கிறது.''

''இவ்வாறு ஸூக்ஷ்மமான வித்யாஸங்களையும் ஆசௌச விதிகளையும் ஏற்படுத்தியது, தொத்து வியாதி அணுகாமலிருக்குமாறு ஒதுங்கியிருக்கும் காலத்தையும் ஒதுங்கியிருக்க வேண்டிய விதத்தையும் நிர்ணயிக்கும் பொருட்டே.''

இவ்வாறு இந்தியா தேசம் முழுவதும் ஸுகாதார விதியை கண்காணிக்கும் பெரிய பொறுப்புள்ள உயர்ந்த உத்யோகம் வகித்தவராகிய வைத்ய

சாஸ்த்ர நிபுணர் டாக்டர் கிங்க் ஐ.எம்.எஸ்., நமது வைதிக மதத்தின் ஆசாரங்களும் ஸ்ப்ருச்ய-அஸ்ப்ருச்யாதி ஆசௌச நியமங்களும் மெடிகல் ஸயன்ஸின் (medical science) படி மிகுந்த உத்கர்ஷம் பெற்றவையென்பதை பற்பல உதாஹரணங்களுடன் விளக்கியிருப்பதை நவீன சீர்திருத்தக் குதர்க்க வாதிகள் ஆழ்ந்து கவனிப்பார்களாக.

ஆனால் ஸயன்ஸ் ஆதாரம் எப்படியிருந்த போதிலும் அந்த ஆசாரங்களை நமது வைதிக மதத்தினர் காரணவிசாரம் செய்யாமல் சாஸ்த்ரம் விதித்த கட்டளையென்கிற ஒரே நியமத்திற்குட்பட்டு பரலோக ஸாதகமாயும் பகவத் ப்ரீதியாகவும் நம்பிக்கையுடன் அனுஷ்டித்து ச்ரேயஸ் பெற்று வருகின்றனர்.

ஆக வேதம் போதிக்கும் தர்மங்களை அனுஷ்டிப்பதால் பல அதிருஷ்டமான பலன்கள் இருந்த போதிலும் அநேக த்ருஷ்ட பலன்களும் அனுபவிக்கப் படுகின்றன என்பது புரிய வருகிறது.

வைதிக மதத்தின் த்ருஷ்டியில் ஒருவர் செய்யும் செயலின் பலன் ஒட்டுமொத்த உலகிற்கும் பகிர்ந்தளிக்கப் படுகின்றது. அச்செயல் நற்செயலாக இருக்கும் பக்ஷத்தில் நற்பலன் கிட்டும். எது நல்லது எது கெட்டது என்பதை புரிந்து கொள்ள வேத சாஸ்த்ர அத்யயனம் முக்யம். ஸாங்கோபாங்கமாக அத்யயனம் செய்த வைதிகன் தான் மற்றவர்களுக்கு ஹிதத்தைக் கூறி நல்வழியில் ஈடுபடுத்தி நன்மையோடு வாழவைக்கத் தகுதியுள்ளவன். அப்படிப்பட்டவர்கள் குறைந்து கொண்டிருக்கும் இக்காலத்தில் மனித ஸமுதாயத்திற்கு பெரும் பொறுப்புள்ளது. 1- வேத- சாஸ்த்ர- அத்யயனம் செய்தவர்களை போஷித்தல். 2- அத்யயனம் செய்யத் தேவையான க்ரந்தங்களை அச்சிடுதல். இவ்விரண்டு பொறுப்புகளும் பொதுவாக எல்லோருக்கும் இருக்க

வேண்டிய போதிலும் விசேஷமாக வைதிகர்களுக்கு இருக்க வேண்டும். ஏனெனில் அவ்விரண்டும் (அத்யயனமும் அதற்குத் தேவையான க்ரந்தங்களும்) வைதிகருக்குத்தான் ப்ரதான தேவைகளாகும். பல வருடங்களாகவே (சுமார் 30. வருடங்களுக்கும் மேலாக) வேதத்தின் மூல க்ரந்தங்களே ப்ரதிக்ருதியில் (xerox) தான் அத்யயனம் செய்யப்பட்டு வருகின்றன என்பது மறுக்க முடியாத உண்மை.

ஏனிந்த நிலை? என்று யோசித்தால் அச்ரத்தையும் இயலாமையும் தான் காரணமாகத் தென்படுகின்றது. ப்ரதான தர்மமாக பார்க்க வேண்டிய மேற்கூறிய இரண்டு பொறுப்புகளிலும் அச்ரத்தையும் இயலாமையும் இருப்பதற்கு மூல காரணம்;-- தேவையில்லாதவைகளில் ச்ரத்தை காட்டுவது, தேவையற்றதற்கு செலவு செய்வது. சுருக்கமாகச் சொன்னால் ஆஸ்திகர்கள் மற்றும் வைதிகர்களின் சக்தி [புத்தி, தபஸ், ஸமயம், த்ரவ்யம்] தேவையற்றவைகளில் வீணாகச் செலவழிக்கப் படுகின்றது. அந்த சக்தி சரியான முறையில் பயன் படுத்தப்பட்டால் தேவைகள் பூர்த்தியாகிவிடும்.

தேவைகளை பூர்த்தி செய்து கொள்ள பெரிய சாதன ஸௌகர்யங்கள் இல்லாத அக்காலத்தில் அச்சிடப் பட்ட க்ரந்தங்களை பலவிதமான சாதன ஸௌகர்யங்களுள்ள இக்காலத்தில் நமக்குத் தேவையான க்ரந்தங்கள் கிடைப்பதில்லை. அதற்குக் காரணம் -- மத்திய அரசின், புத்தகங்களை வெளியிடுவதற்கான சகாயம் தேவையான க்ரந்தங்களின் ப்ரகாசனத்திற்கு கிடைப்பதில்லை. ஆதாயத்திற்கும் புகழுக்கும் மட்டும் உபயோகப் படக்கூடிய [தேவையில்லாத] புத்தகங்களுக்கு அந்த சகாயம் கிடைக்கிறது. மாநில அரசுகளும் ப்ராந்த பாஷா மோஹத்தில் திளைக்கின்றன. ஆகையால் அங்கிருந்து சகாயத்தை பெறுவதற்கு இடமில்லை.

நம் ஸனாதன தர்மத்திற்கு ஆதாரமான வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் போஷிப்பதற்காக அமைந்த பலவிதமான தர்மஸ்தாபனங்களும் கூட வேத-சாஸ்த்ர க்ரந்தங்களை அச்சிடுவதற்கும் ப்ரகாசப்படுத்துவதற்கும் அக்கறை காட்டுவதில்லை. அத்தி பூப்பது போல் ஒன்றிரண்டு நடந்திருக்கலாம். அதுவும் க்ரந்த ஸம்ரக்ஷண கண்ணோட்டத்தில் நடந்ததா என்பதை கவனிக்கணும். வேத-சாஸ்த்ர ஸம்ரக்ஷணத்திற்காகவே உருவாக்கப் பட்டுள்ள (trust's) ட்ரஸ்டுகளும் அத்யாபகர்களுக்கும் வித்யார்த்திகளுக்கும் அத்யாவச்யமான க்ரந்தங்களை ப்ரகாசனப் படுத்துவதற்கு முன்வருவதில்லை. தர்ம ப்ரசாரம் செய்பவர்கள் க்ரந்த ஸம்ரக்ஷணோபாயத்திற்கு வாக் ஸஹாயம் கூட செய்வதில்லை. ஆராய்ச்சி மையங்களும் பெரிய நூலகங்களும் வேத ஸம்பந்தமான க்ரந்தங்களை அச்சிடுவதில் ச்ரத்தை கொள்வதில்லை. வெளியீட்டாளர்களும் (publisher's) வேத க்ரந்தங்களை அச்சிடுவதில்லை. காரணம் லாபக்கணக்குப் போடுகிறார்கள். எத்தனை பிரதிகள் விற்கும்? எத்தனை காலம் கழித்து மூலதனம் திரும்பும்? என்று யோசிக்கிறார்கள். கிடைக்கக் கூடிய புத்தகங்களின் விலையோ மிக அதிகமாக உள்ளது.

இப்படிப்பட்ட கசப்பான அனுபவங்களை அனுபவிக்கும் ஜனங்களுக்கு உபகாரம் செய்வதற்காக தர்மபிச்சை எடுத்து அதில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு க்ரந்தங்களை அச்சிட்டு ப்ரகாசப்படுத்தி வருகின்றோம். குரு கடாக்ஷத்தினாலும் பகவத் ஸங்கல்பத்தாலும் எமது ப்ரகாசனத்தில் ஆறு க்ரந்தங்கள் வெளியிடப் பட்டிருக்கின்றன என்பது யாவரும் அறிந்ததே. அந்த வரிசையில் இந்த ப்ரக்ருத க்ரந்தம் **"ஆசௌச நிர்ணயம்"** ஏழாவது வெளியீடு. இதில் இரண்டு

பாகங்கள் உள்ளன. முதல் பாகத்தில் ஜனன-மரண ஸமயங்களில் ஏற்படும் தீட்டின் பிரிவுகள், அதன் விவரம், கர்த்ருக்ரமம், வபனம், உதகதானம், ஸபிண்டீகரணம், மாஸிகம் முதலிய அபரக்ரியை சார்ந்த பல விஷயங்கள் தொகுத்துக் கொடுக்கப் பட்டுள்ளன. இரண்டாம் பாகத்தில் ச்ராத்த பேதங்கள், அவைகளில் கூர்ந்து கவனிக்க வேண்டிய பல அம்சங்கள், ஸங்கீர்ண விஷயங்கள் (ஆசாரம் ஸம்பந்தப்பட்ட பல விஷயங்கள்) தொகுக்கப் பட்டுள்ளன. முடிந்த வரை தொகுக்கப்பட்ட விஷயங்களில் விடுபட்ட சில அம்சங்கள் இருந்தாலோ, அவ்வப்போது நிகழக்கூடிய சம்பவங்களில் சந்தேகம் இருந்தாலோ தர்மசாஸ்த்ரம் அறிந்தவர்களிடம் கேட்டு தெரிந்து கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

ஆஸ்திகர்கள் இப்புத்தகத்தை உபயோகித்துக் கொண்டு மேலும் வேத-சாஸ்த்ர க்ரந்தங்களை அச்சிட்டு ப்ரகாசப்படுத்துவதற்கு ஸஹாயம் செய்யுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இப்புத்தகத்திற்கு முன்னுரை எழுதிக் கொடுத்து ஆசீர்வதித்த மீமாம்ஸா சாஸ்த்ர வித்வான் தர்மப்ரவக்த்ருவர "மஹாமஹோபாத்யாய" ப்ரம்ஹஸ்ரீ **E. பாலஸுப்ரம்ஹண்ய சாஸ்த்ரிகள்** அவர்களுக்கு தன்யவாதங்களுடன் அநேக கோடி நமஸ்காரங்களை ஸமர்ப்பிக்கின்றோம்.

இந்த க்ரந்தத்தை வெளியிட்ட, "வித்வத்ஸபை" மூலம் இயங்குகின்ற **வேதசாஸ்த்ர சிக்ஷா அனுஸந்தான கேந்த்ரம்** மேலும் துர்லபமான பல க்ரந்தங்களை வெளியிட வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறோம். அதற்கு ஒருதுணையாக நின்று ஆஸ்திகர்களும் உறுப்பினர்களும் இந்த ஸம்ஸ்தையை அபிவ்ருத்தி செய்ய வேண்டுகிறோம்.

இப்புத்தகத்தை தமிழில் டைப் (type) செய்து கொடுத்து உதவிய நரேந்த்ரன் மற்றும் வெங்கடாசலம் இருவருக்கும் எங்களது அன்பார்ந்த நன்றி.

மேலும் இப்புத்தகத்தை நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்த "ஸ்ரீ மாருதி ப்ரெஸ்" உரிமையாளரின் வியாபார அபிவ்ருத்திக்காக ஸர்வேச்வரனை ப்ரார்த்திக்கிறோம்.

ஸர்வதாரி புரட்டாசி அமாவாஸை — இப்படிக்கு

September 2008 — **R. முரளீகிருஷ்ண ச்ரௌதிகள்**

## அட்டவணை

*****

ஓம் நம: பரமாத்மனே

# ஆசௌச நிர்ணய:

*முதல் பாகம்*

## 1.கர்த்ருக்ரம:

1. ஔரஸபுத்ர: (Legitimate son)
   1) பலரிருந்தால் மூத்தவன்.
   2) இரட்டைப்பிள்ளைகளாயிருந்தால் பிந்திப்பிறந்தவனே மூத்தவன்
   3) பல பெண்சாதிகளிருந்து எல்லோரும் புத்திரவதிகளாயிருந்தால் வயதில் பெரியவனே மூத்தவன்.
   4) ஸ்வீகாரம் செய்துகொண்டபின் ஔரஸன் உண்டானால் ஔரஸனே கர்தா.
   5) ஒருவனுக்கு 2 பெண்சாதிகளிருந்து மூத்தாளை வைத்துக்கொண்டு ஸ்வீகாரம் செய்துகொண்ட பிறகு இளையாளுக்கு பிள்ளை பிறந்தால் தகப்பன் விஷயத்திலும், இளையவள் விஷயத்திலும் ஔரஸனே கர்த்தா-வென்பதில் ஸந்தேகமில்லை. மூத்தாள் விஷயத்திலும் அவனேதான் கர்த்தா. ஸ்வீகிருதனல்ல.
2. பௌத்ர: (Grandson)
3. ஷெ பிள்ளைகள். (Great grandson)
4. தத்த: (Adopted son)
5. ஷெ பிள்ளைகள். (Adopted son's son)
6. தனஹாரீ தௌஹித்ர: (Daughter's son "heir")
7. தௌஹித்ர: (Daughter's son)
8. பத்னீ (Wife) (பலபேர்களிருந்தால் மூத்தாள், அவிபக்த குடும்பத்தில் ப்ராதா)

9. ஸ்த்ரீகள் விஷயத்தில் அவள் வயிற்றில் பிறந்த ஆண் ஸந்ததி வர்க்கம் இல்லாவிடில் ஸபத்னீ-புத்ர: (Co-wife's son)
10. பர்தா (Husband)
11. துஹிதா (Daughter)
12. ப்ராதா. (ஸ்த்ரீகள் விஷயத்தில் எல்லாவற்றுக்கும் பர்தாவினுடைய என்று சேர்த்துக்கொள்ளவும்.) (Brother)
13. ஷெ பிள்ளைகள். (Brother's sons)
14. அஸோதரப்ராதா. (Cousin)
15. ஷெ பிள்ளைகள். (Cousin's sons)
16. பிதா. (Father)
17. மாதா. (Mother)
18. ஸ்நுஷா (நாட்டுப்பெண்) (Daughter-in-law)
19. பௌத்ரீ (Grand daughter )
20. தௌஹித்ரீ (Daughter's daughter)
21. பௌத்ரஸ்ய பத்னீ. (Grandson's wife)
22. தத்புத்ரீ (Great grand daughter)
23. தத்தனுடைய பத்னீ (Adopted son's wife )
24. பகிநீ (தமக்கை, தங்கை) (Sister)
25. பாகிநேய: (மருமான்.) (Sister's son)
26. ஸபிண்ட: (Blood relation)
27. ஸமாநோதக: (Distance Brother)
28. மாத்ருஸபிண்ட: (Mother's blood relation )
29. தத்ஸமாநோதக: (Mother's Distance brother )
30. ஜாமாதா (Son-in-law)
31. ஸகா (Friend)
32. தனஹாரீ. (Heir)

[पुत्रः पौत्रश्च तज्जश्च पुत्रिकापुत्र एव च।
पत्नी भ्राता च तज्जश्च पिता माता स्नुषा तथा॥
भगिनी भागिनेयश्च सपिण्डो धनहार्यपि।

पूर्वपूर्वविनाशे स्युः उत्तरोत्तरपिण्डदाः॥]

## 2. ஸம்ஸ்கார:

1.) ஒரு ஸூத்ரகாரனுக்கு கர்தா வேறு ஸூத்ரகாரனாயிருந்து ஸம்ஸ்காராதிகளைச் செய்கிற விஷயத்தில் இறந்தவனுடைய ஸூத்ரத்தால் ப்ரதமாப்திகம் வரையில் செய்து ஆப்திகம் முதல் கர்தா தன் ஸூத்ரத்தினால் செய்யவேண்டியது.

2.) இறந்தவனுக்கு அவனுடைய ஸூத்ரத்தினாலேயே தஹனம் முதலான ஸகல ஸம்ஸ்காரங்களும் செய்யப்படவேண்டும். தஹன காலத்தில் அவனுடைய ஸூத்ரம் கிடைக்காவிட்டால் அந்ய ஸூத்ரத்தால் செய்யலாம். அப்படி தஹனம் செய்யப்பட்டு பிறகு நடுவில் ஸ்வஸூத்ரம் கிடைத்தாலும் அதால் செய்யாமல் அந்ய ஸூத்ரத்தாலேயே ஏகோத்திஷ்டம் வரையிலும் செய்யவேண்டும். எப்படியானாலும் ஸபிண்டீகரணம் ம்ருதனுடைய ஸூத்ரத்தாலேயே செய்யப்பட வேண்டும்.

3.) ஆனால் யஜுர்வேதிகளுக்கு போதாயன ஸூத்ரத்தால் செய்யப்பட்டாலும் ஸ்வஸூத்ரத்தால் செய்யப்பட்டது போலாகும். நடுவில் ஸ்வஸூத்ரம் கிடைத்தாலும் அதைக்கொண்டு மேல் கிரியைகள் நடத்தலாம்.

4.) அந்யனால் செய்யப்பட்டபின் (பிள்ளையைத் தவிர்த்த) முக்யகர்த்தா 10. நாளைக்குள் வந்தால் புநர்தஹனமில்லை. ஸஞ்சயனம் முதல் யாவற்றும் செய்யவேண்டியது. ஸஞ்சயநத்திற்குப் பின் வந்தால் பிண்டோதகம் முதலான யாவத்தும் செய்ய வேண்டியது.

5.) அந்யனால் தஹநம் செய்யப்பட்டபின் பிள்ளை 10 நாட்களுக்குள் வந்தால் புநர்தஹநம் வபநம்

முதலான யாவற்றும் செய்யவேண்டியது. 10 நாளோடு தீட்டுப்போகும். 12வது நாள் ஸபிண்டீகரணம் செய்யலாம். ஸஞ்சயநத்திற்குப் பின் 10 நாட்களுக்குள்ளாவது, 10வது நாளிலாவது வந்தால் பிண்டோதகம் முதலான யாவற்றும் பாக்கி நாளில் செய்யவேண்டியது. அந்தந்த காலத்தில் பிண்டோதகம் முதலானவற்றையும் செய்து 11வது நாளில் ஆத்யம் செய்து, கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்காத்து பிறகு ஆவ்ருத்தாத்யம் செய்து த்ரிபக்ஷாதி காலத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவேண்டியது. 12 வது நாளில் ஸபிண்டீகரணம் செய்யக்கூடாது.

6) அந்யனால் தஹனம் செய்யப்பட்டு ஸஞ்சயனத்திற்கு முன் 10வது நாள் ராத்திரியிலாவது, 11வது நாள் காலையிலாவது புத்ரன் வந்தால் 11வது நாள் காலையில் புநர்தஹனம், வபநம் முதல் யாவற்றையும் செய்து, ஆத்ய ச்ராத்தத்தையும் செய்து, கேட்டது முதல் 10நாள் தீட்டுக்கார்த்து உதககதானம் மட்டில் செய்து வந்து தீட்டுப்போன பின் ஆவ்ருத்தாத்யம் செய்து த்ரிபக்ஷாதி காலத்தில் ஸபிண்டீகரணத்தை செய்யவேண்டியது.

7) ஸஞ்சயனத்திற்குப் பின் 11வது நாளில் வந்தால் வபநம் ´செய்துகொண்டு வ்ருஷோத்ஸர்ஜனம் ஆத்யச்ராத்தம் இவைகளைச்செய்து, கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்கார்த்து உதககதானம் மட்டில் செய்து தீட்டுப்போன பின் ஆவ்ருத்தாத்யமும் த்ரிபக்ஷாதி காலத்தில் ஸபிண்டீகரணமும் செய்யவேண்டியது.

8) அந்யர்கள் செய்கிற விஷயத்தில் புத்ரன் ஸஞ்சயனத்திற்கு முன் வந்தால் புநர்தஹனம் முதற்கொண்டும் பின் வந்தால்

புநர்தஹனமன்னியில் மத்ததெல்லாவற்றையும் செய்யவேண்டியது.

9) கநிஷ்டனால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு 10 நாளைக்குள் ஸஞ்சயனத்திற்கு முன் ஜ்யேஷ்டன் வந்தால் வபன, ஸஞ்சயனங்களைச் செய்து, கடந்த பிண்டோதகங்களை ஒரே தடவையில் செய்து, பாக்கி நவ ச்ராத்தாதிகளை அந்தந்த காலத்தில் செய்து, 11வது நாளில் ஆத்யத்தையும் ஆவ்ருத்தாத்யையும் செய்து, 12வது நாளில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவேண்டியது. ஸஞ்சயனத்திற்குப் பிறகு 10 நாள்களுக்குள் வந்தால் மேலே **5வது பாராவில்** சொல்லியபடி செய்யவேண்டியது. ஸஞ்சயனத்திற்கு முன் வந்தால் 10 நாளோடு தீட்டு நிவிருத்திக்கும், பின் வந்தால் கேட்டது முதல் 10 நாள் தீட்டு உண்டு.

10) கநிஷ்டனால் 9 நாள் க்ரியைகள் செய்யப்பட்டு 10வது நாள் ஜ்யேஷ்டன் வந்தால் கண்டம் வரையில் வபநம் செய்து கொண்டு 9நாள் உதகபிண்டங்களை ஒரே தடவையாய் செய்து, 10வது நாள் உதகம் பிண்டம் ப்ரபூதம் முதலியவைகளைச் செய்து, ஸர்வாங்க வபனத்துடன் சாந்திஹோமத்தைச்செய்து, 11வது நாளில் ஆத்யச்ராத்தத்தைச் செய்து கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்காத்து, பிறகு ஆவ்ருத்தாத்தையும், த்ரிபக்ஷாதி காலத்தில் ஸபிண்டீகரணத்தையும் செய்யவேண்டியது. புத்ரனைத்தவிர வேறு கர்தாவானால் 10 நாளோடு தீட்டுப்போய்விடும்.

11) கநிஷ்டன் செய்யும் விஷயத்தில் 11வது நாள் ஜ்யேஷ்டன் வந்தால் வபனம் செய்துகொண்டு வ்ருஷோத்ஸர்ஜனம் ஆத்யச்ராத்தம் இவைகளைச் செய்து கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்கார்த்து உதகதானத்தைமட்டில் செய்து (பிண்டமில்லை)

தீட்டுப்போன பின் ஆவ்ருத்தாத்யத்தையும் த்ரிபக்ஷாதி காலத்தில் ஸபிண்டீகரணத்தையும் செய்யவேண்டியது.

12) ஜ்யேஷ்டனால் செய்யப்படுகிற விஷயத்தில் கநிஷ்டனுக்கு உதகமாத்ரம். ஸஞ்சயனத்திற்கு முன் கேட்டால் 10 நாளோடு தீட்டுப்போய்விடும். பின் கேட்டால் கேட்டது முதல் 10 நாள் தீட்டும் உதகதானம் மட்டிலுமுண்டு.

13) அந்யனாலாவது கநிஷ்டனாலாவது ஸபிண்டீகரணமும் செய்யப்பட்ட பின் ஜ்யேஷ்டன் வந்தால் வபனம் செய்து கொண்டு 10நாள் உதக-தானம் செய்து 11வது நாளில் புநஸ்ஸபிண்டீகரணத்தைச் செய்யவேண்டியது.

14) அந்யர்களால் செய்யப்பட்டதில் ஜ்யேஷ்டன் வராமல் கநிஷ்டன் வந்தால் மேலே கண்ட மாதிரி செய்து பார்வணமாக ஸபிண்டீகரணத்தைச் செய்யவேண்டியது.

15) ஸபத்னீ புத்ரனால் க்ரியைகள் நடத்தப்பட்ட மாதாவின் விஷயத்தில் ஔரஸபுத்ரனை ஜ்யேஷ்டனாகவும், ஸபத்னீ புத்ரனை கநிஷ்டனாகவும் பாவித்து மேலே சொல்லிய நியாயங்களை அவர்கள் விஷயத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது.

16) துர்மரணத்தை அடைந்தவர்களுக்கு க்ருத்யம் காலாந்தரத்தில் செய்யப்படவேண்டும் என்றிருந்தாலும் ப்ராயச்சித்தம் செய்தால் உடனேயும் செய்யலாமென்றிருக்கிறது. ப்ராயச்சித்தமாவது:---

| | | |
|---|---|---|
| ப்ராஜாபத்யம் | 5 | ப்ராஜாபத்ய க்ருச்ரம் 3 |
| தப்தம் | 15 | கொண்டது ஒரு தப்த க்ருச்ரம். |
| சாந்த்ராயணம் | 5 | சாந்த்ராயணமும் அதுபோல். |

ஆக 65 ப்ராஜாபத்ய க்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டியது.

## 3. ஸஞ்சயனம்

1) தாய், தகப்பன் தவிற மற்றவர்களுக்கு வெள்ளிக்கிழமையில் ஸஞ்சயனம் செய்யவே கூடாது.

2) மற்றவர்களுக்கு தர்சம் ஸம்க்ரமணம் இவை குறுக்கிட்டு காலமில்லாவிட்டால் வெள்ளிக் கிழமை தோஷம் பாராமல் ஸஞ்சயனம் செய்து க்ரியையை முடித்துவிட வேண்டியது. தர்சம் வகையறாவுக்குப்பிந்தி க்ரியையை ஆரம்பிக்கும் பக்ஷத்தில் வெள்ளிக்கிழமையில் ஸஞ்சயனம் செய்யக்கூடாது.

3) கர்தாவைத்தவிர வேறு எவரும் கங்கை முதலியவைகளில் அஸ்திநிக்ஷேபம் செய்யக் கூடாது. அவ்வாறு செய்தால் தோஷமுண்டு.

## 4. ப்ரபூதம்

1) தர்ச ஸங்க்ரமணங்களுக்காக நடுவில் க்ரியையை முடித்துவிட்டாலும் ப்ரபூதபலி ப்ரதானம் பாஷாணோத்தாபநம் இவைகளை மட்டும் 10வது தினத்திலேயே செய்யவேண்டியது.

## 5. உதகதானம்

1) அவரவர்களுக்கு ஏற்பட்ட ஆசௌசாந்த்ய-தினத்தில் உதகதானம் செய்யவேண்டியது.

2) தாய், தகப்பன் தவிற மற்றவர்களுக்கு தர்ச ஸங்க்ரமணங்கள் நடுவில் வந்தால் அதிலேயே க்ரியைகளை முடிக்கவேண்டியது. க்ஞாதிகளும் உதகதானத்தை முடித்துவிட வேண்டியது. தர்ச ஸங்க்ரமணங்களுக்குப்பின் கிருத்தியம் ஆரம்பிப்பதானால் கிரமப்படி செய்ய வேண்டியது.

கர்தாவோடு கூட க்ஞாதிகள் உதக தானத்தை முடிக்காமல் 10வது நாளில் செய்வதாயிருந்தால் பாஷானஸ்தாபன குண்டத்தில் செய்யக் கூடாதென்பது பெரியோர்களின் ஆசாரம்.

[दर्शः सङ्क्रमणं वापि दशाहान्तर्यदा भवेत्।
तावदेवोत्तरं तन्त्रं समाप्यमिति निश्चयः॥
यदि संक्रमदर्शौ तु दशाहाभ्यन्तरे यदा।
मातापित्रोरथान्येषां दर्श एव समापयेत्॥
अस्थिसञ्चयनं चापि दर्शात्पूर्वं विधीयते॥]

3) ப்ரேதத்திற்கு பசி தாகமதிகமானதால் தர்ச-ஸங்க்ரமணங்களுக்கு முந்தியே முடித்துவிட வேண்டியது முக்யபக்ஷம். பிறகு ஆரம்பிப்பது கௌணபக்ஷம்.

4) தசராத்ர க்ஞாதிகள் 10வது தினத்திலும் த்ரிராத்ர க்ஞாதிகள் 3வது தினத்திலும் உதகதானத்தைச் செய்ய வேண்டியது.

5) ஆசௌச ஸன்னிபாத விஷயத்தில் தனித்தனியே ஒவ்வொன்றுக்கும் உதகதானம் செய்யவேண்டியது.

6) உதகதானம் செய்ய மறந்து தவறிவிட்டால் மறுநாளில் உதகதானத்தை செய்து அன்றும் தீட்டுக்கார்க்க வேண்டியது.

7) தர்ச ஸங்க்ரமணங்கள் இரண்டும் நடுவில் வந்துவிட்டால் ஸங்க்ரமணத்திற்குப்பின் வந்தாலும் அதற்கு முன் வந்தாலும் தர்சத்திலேயே க்ரியையை ஸமாப்தி செய்யவேண்டியது.

8) ஸங்க்ரமணமாத்ரம் நடுவில் வந்தால் அதில் க்ரியையை ஸமாப்தி செய்யவேண்டியது.

9) பிதாவின் தசாஹமத்தியில் மாதாவின் மரணமேற்பட்டிருக்கும் பக்ஷத்தில் பிதாவின் தசமதினத்திலேயே மாதாவுக்கும் உதகபிண்ட ஸமாபனம் செய்யவேண்டியது.

10) "ஸமாபனம்" என்று சொல்லியவிடத்தில் உதகதானம், பிண்டதானம், ஏகோத்தரவ்ருத்தி ச்ராத்தங்கள் இவைகளை மட்டும் ஆகர்ஷித்து முடிக்கவேண்டுமேயல்லாது, நவ ச்ராத்தங்களை ஆகர்ஷிக்கக்கூடாது. அவைகளை ஸ்வகாலங்களிலாவது 11வது தினத்திலாவது செய்யவேண்டியது.

11) விவாஹதீக்ஷையின் மத்தியில் ஏற்பட்ட க்ஞாதிமரணத்திற்கு 30 உதகதானம் மாத்திரம் செய்யவேண்டியது.

## 6. வபனம்

1) வயதில் தனக்குப்பெரியோர்களான தசராத்ர க்ஞாதிகளின் மரணத்திலும், மாதாமஹன், மாதாமஹீ, மாதுலன், மாதுலானீ, மாமனார், மாமியார், பித்ருபகினீ, மாத்ருபகினீ, ஸீமன்தஜா பகினீ, ஜனகமாதா, ஜனகபிதா இவர்களின் மரணத்திலும் வபநம் செய்துகொள்ள வேண்டியது.

2) மாமனார், மாமியார்களுக்கு ஒருநாள் தீட்டுக்கார்க்கும் விஷயத்தில் வபனமில்லை.

3) வயதில் சிறியவர்களான பித்ருவ்யன், மாதுலன், மாதுலானீ, மாமனார், மாமியார், பித்ருபகினீ, மாத்ருபகினீ, ஸபத்னீமாதா, பித்ருவ்யபத்னீ, ஜ்யேஷ்டப்ராத்ருபத்னீ, இவர்களுக்கு கிருத்தியம் செய்தால் வபனம் உண்டு. இல்லாத பக்ஷத்தில் இல்லை.

4) மேல் சொல்லப்பட்டவர்கள் உபநயனம் ஆகாதவர்களானால் கர்தாவுக்கும் வபனமில்லை. (ஸ்த்ரீகளுக்கு உபநயனஸ்தானத்தில் விவாஹம் சொல்லப்படுகிறது.)

5) மேலே கண்டவர்களுக்கு கர்த்தா வேறு இருக்க ஏதோ காரணவசத்தால் தஹனம் மட்டில் செய்யும்படி நேர்ந்தால் தஹனாங்க வபனமில்லை.

6) த்ரிராத்ர க்ஞாதிகளின் மரணத்தில் வபனம் கிடையாது. க்ருத்யம் செய்தால் மூத்தவர்களுக்கு மட்டில் வபனம் உண்டு.

7) அதிக்ராந்தாசௌசத்திலும் வபனமுண்டு.

8) தீக்ஷாமத்யத்தில் வபனப்ரஸக்தி உள்ள க்ஞாத்யாதிமரணத்தில் வபனமில்லை. தாய், தகப்பன் மரணத்தில் வபனமுண்டு.

9) தாய் இறந்து 10 நாளைக்குள் தகப்பன் இறந்தால் கர்தாவுக்கு தஹநாங்க வபனமில்லை. தகப்பன் இறந்து 10 நாளைக்குள் தாய் இறந்தால் வபனமுண்டு.

10) கர்பதீக்ஷை விவாஹதீக்ஷை இவைகளின் மத்தியில் மாதாமஹாதிகள் இறந்து க்ருத்யம் செய்யும்படி நேர்ந்தால் வபனமுண்டு. இல்லாவிட்டால் இல்லை.

11) மாதா பித்ருதீக்ஷையில் ஷௌ விஷயத்திற்கும் வபனமில்லை.

12) அபரவிஷயத்தில் வெள்ளிக்கிழமையில் க்ஷௌரம் செய்துகொள்ளவே கூடாது. மாதா பிதாக்களின் விஷயத்தில் ஷௌ நிஷேதம் இல்லை.

13) புத்திரனைத்தவிர மற்றவர்கள் கிருத்தியம் செய்யும் பக்ஷத்தில் வெள்ளிக்கிழமையிலாவது ராத்திரியிலாவது தஹனம் ஏற்பட்டால் தஹனாங்க வபனத்தை மறுநாள் செய்துகொள்ள வேண்டியது.

14) தசமதினமாவது வபனப்பிரஸக்தி உள்ள 3 வது தினமாவது வெள்ளிக்கிழமையாக இருந்தால் அதற்கு முதல் நாளே செய்துகொள்ள வேண்டியது. அன்றைய தினமே ச்ரவணமானால் மறுநாள் செய்துகொள்ள வேண்டியது (ஆனால் அவ்விதம் ஆசாரமில்லை என்று சிலர் சொல்கின்றனர்)

15) உதகதான ப்ரஸக்தியில்லாமல் வபநமட்டிலுள்ள 3 நாள் தீட்டை 3வது நாளான வெள்ளிக்கிழமையில் கேட்டால் அதற்கு மறுநாள் க்ஷௌரம் செய்து கொண்டு ஸ்நானம் செய்தால் தீட்டுப்போய்விடும்.

16) 10வது தினத்தில் க்ஷௌரம் உதகதானம் இவைகளுக்கு காலமில்லாமல் கேட்டால் மறுநாள் க்ஷௌரம் உதகதானம் இவைகளைச் செய்து தீட்டுக்கார்க்க வேண்டும், மறுநாள் தீட்டுப்போகும்.

17) வயதில் பெரியோர்களா இல்லையா என்ற சந்தேகமுண்டானால் வபனம் செய்து கொள்வதே உசிதம்.

18) ஆசௌச ஸந்நிபாதத்தில் அநேக ஆசௌசங்களுக்கும் க்ஷௌரம் ஒன்றுதான்.

19) மாதா பிதாக்களின் மரணவிஷயமான ஆசௌசத்தில் வபன ப்ரசக்தி உள்ள மாதாமஹாதி மரணத்தில் வபனமில்லை.

20) பத்னீ, புத்திரன், புத்திரி, இவர்களின் மரணாசௌச மத்யத்தில் ஷெ மாதாமஹாதி மரணம் சம்பவித்தால் அதற்கும் வபனம் கிடையாது. ஆனால் கர்தாவாக இருந்தால் தஹநாங்க வபனமும் கிரமப்படி ஸர்வாங்க வபனமும் உதகதானம் முதலியவையுமுண்டு.

21) உதகதான ப்ரஸக்தியில்லாத மாதுலாதி மரணத்தை 3வது நாள் ராத்திரியில் கேட்டால் மறுநாள் வபனம் செய்துகொண்டு ஸ்நானம் செய்தால் தீட்டுப்போய்விடும். அன்று ச்ராத்தமாயிருந்தாலும் வபனம் செய்து கொண்டு தான் ச்ராத்தம் செய்ய வேண்டியது

22) 12வது தினத்தில் ஸபிண்டீகரணம் செய்யாவிட்டால் பிறகு க்ஷௌரம் செய்து கொண்டுதான் செய்ய வேண்டும்.

23) மரணாசௌசத்தில் ஜீவபித்ருகனுக்கு வபனம் கிடையாது. "ந ஜீவபித்ருகை: கார்யம் சாவே க்ஷௌரம் கதாசன. யதி குர்யாத் ப்ரமாதேன குலக்ஷயகரம் பவேத்"

24) ஒருவனுக்கு இரண்டு பத்னிகளிருந்து இருவர்களும் பிரஸவித்தால் ஜ்யேஷ்ட பத்னியின் பிரஸவத்தை அனுசரித்து தீக்ஷையை நிவிருத்தி செய்து கொள்ள வேண்டும்.

25) மாதா பித்ாக்களுக்கு க்ருத்யம் செய்யும் புத்திரர்களைத்தவிர மற்ற எவரும் எக்காரணத்தாலும் ராத்திரியில் வபனம் செய்து கொள்ளக்கூடாது.

## 7. தீட்டுச்சேர்க்கையில் வபனம் உதகதானம்

1) வபனம் அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் 3 நாளுள்ள ஜனனாசௌசம் வந்தாலும், பின் சொன்னதில் முன் சொன்னது வந்தாலும், மரணாசௌசம் பலமானதால் மரணாசௌசத்தின் 3வது தினத்தில் வபனத்தையோ உதகதானத்தையோ செய்ய வேண்டியது.

2) வபனமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் உதகதானமட்டிலுள்ள 3 நாள் தீட்டு வந்தாலும்,

பின் சொல்லியதில் முன்சொல்லியது வந்தாலும், 2 தீட்டுகளும் ஒன்றாகப் போய் விடுமாதலால் வபனமுள்ள ஆசௌசத்திற்கு முதலில் வபனம் செய்து கொண்டு உதகதானமுள்ள ஆசௌசத்திற்கு உதகதானம் செய்ய வேண்டியது.

3) வபனமுள்ள 3 நாள் தீட்டுடன் அதே விதமான தீட்டுச்சேர்ந்தாலும், உதகதானமுள்ள 3 நாள் தீட்டுடன் அதே விதமான தீட்டுச் சேர்ந்தாலும் 2 தீட்டுகளும் ஒன்றாய் போய் விடுமாகையால் வபனம் ஒன்று தான். உதகதானத்தை மட்டும் தனித்தனி செய்ய வேண்டியது.

4) வபனமுள்ள, அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் 10 நாள் ஜனனத்தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது சேர்ந்தாலும், மரணாசௌசத்துடன் ஜனனாசௌசமும் போய் விடுமாதலால் 3வது நாளில் வபனத்தையோ உதகதானத்தையோ செய்ய வேண்டியது.

5) வபனமுள்ள, அல்லது உதகதானமுள்ள 3 அல்லது 10நாளுள்ள தீட்டு மத்தியில் தனக்கே சிசு பிறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது நேர்ந்தாலும், கர்பதீக்ஷையும் தீட்டும் பலமானதால் வேறு தீட்டுக்கு க்ஷௌரமில்லை. 3, 10 நாள் தீட்டின் 3வது, 10 வது நாளிலாவது பிறப்புத்தீட்டுடன் போவதாயிருந்தால் 10வது நாளில் உதகதானம் மட்டில் செய்து விட்டு பிறகு கர்பதீக்ஷா நிவ்ருத்தியை செய்து கொள்ள வேண்டியது.

6) வபனமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் வபனமில்லாத அல்லது வபனமுள்ள 10 நாள் தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன்

சொல்லியது வந்தாலும், 10 நாள் தீட்டு பலமானதால் 3 நாள் தீட்டுக்கு வபனமில்லை.

7) உதகதானமுள்ள 3நாள் தீட்டு மத்தியில் 10நாள் தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும், 3வது நாளிலாவது, 10 நாளோடு அதுவும் சேர்ந்து போவதாயிருந்தால் 10வது நாளிலாவது உதகதானம் தனித்தனியாய் செய்ய வேண்டியது.

8) வபனமுள்ள அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் தாய் தகப்பன் இறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது நேர்ந்தாலும், 3 நாள் தீட்டுக்கு வபனம் கிடையாது. 3 வது நாளிலாவது, 10வது நாளோடு சேர்ந்து போவதாயிருந்தால் அன்றாவது உதகதானம் தனித்தனியாய் செய்ய வேண்டியது.

9) வபனமுள்ள அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் பத்னீ, பிள்ளை, பெண் இறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது நேர்ந்தாலும், கர்தா இவனே ஆனாலும், வேறு இருந்தாலும் வபனம் இல்லை. உதகதானம் மட்டில் மேலே கண்ட பாராக்களில் சொல்லியபடி செய்ய வேண்டியது.

10) வபனம் உதகதானமுள்ள 10 நாள் தீட்டு மத்தியில் தாய், தகப்பன், பத்னீ, பிள்ளை, பெண் இறந்தாலும், பின்சொல்லியதில் முன் சொல்லியது நேர்ந்தாலும், பத்னீ முதலியவர்களுக்கு இவனே கர்த்தாவாயிருந்தாலும், வேறு கர்த்தாயிருந்தாலும் வபனம் கிடையாது. உதகம் மட்டில் அந்தந்த தீட்டின் 10வது நாளிலாவது, தாய் தகப்பன் வகையறா தீட்டோடு போவதாயிருந்தால் அந்த 10வது நாளிலாவது, சாந்தி ஹோமத்திற்குப் பிறகு தனியாய் செய்ய வேண்டியது. பத்னி வகையறா

மரணத்தில் க்ஞாதிமரணத்திற்கு வபனம் உண்டென்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். வபனம் சுத்யர்தம் என்றும் உதகதானத்திற்கு அங்கமென்றும் சொல்லப்படுகிறது. சிலர் சுத்யர்தம் என்று ஆசரிக்கிறார்கள். சிலர் வயதில் பெரியவர்களுக்கு மட்டில் வபனம் அனுஷ்டிக்கப் படுகிறது ஆகையால் அது உதகதானாங்க மென்றாவது சுத்யர்தமென்றாவது சொல்லமுடிய வில்லை. ஆதலாலும் மற்ற நியாயங்களைக் கொண்டும் சுத்யர்தமென்று வயதை கவனியாமல் வபனத்தை அனுஷ்டிக்கிறவர்களுக்கு பத்னி வகையறா மரணத்தில் க்ஞாதிமரணத்திற்கு வபனமுண்டு. மற்றவர்களுக்கு இல்லை, பத்ன்யாதி மரணம் பலமானதால்.

11) வபனப்ரஸக்தியுள்ள 10 நாள் தீட்டு 2 சேர்ந்தால் 2க்கும் ஒரே க்ஷௌரம்.

12) வபனப்ரஸக்தியுள்ளதும் இல்லாததுமான 10 நாள் தீட்டுகள் 2 சேர்ந்தால் வபனமுண்டு.

13) உதகதானப்ரஸக்தியுள்ள 10 நாள் தீட்டுகள் 2 சேர்ந்தால் தனித்தனியாய் உதகதானம் செய்யவேண்டியது.

---

## 8 தீக்ஷையில் வபனம்

1) தீக்ஷை என்பதால் கர்பதீக்ஷை, விவாஹதீக்ஷை, உபநயனதீக்ஷை, மாத்ருதீக்ஷை, பித்ருதீக்ஷையும் சொல்லப்படுகிறது.

2) கர்பதீக்ஷை என்பது பத்னி கர்பமானபோது 4வது மாதம் முதல். விவாஹோபநயன தீக்ஷைகள் விவாஹம், உபநயனம் நடந்தபின் 1 வருஷம் அல்லது 6 மாதம். மாதாபித்ரு தீக்ஷைகள் மாதாபிதாக்களின் மரணத்திற்குப் பின் ஒரு வருஷம்.

3) மாத்ருதீக்ஷை, பித்ருதீக்ஷை இவ்விரண்டு சப்தங்களும் இங்கு ப்ரஹ்மசர்ய சேசதாரணாதி நியமங்களுடன் கூடிய தீக்ஷையைக் கூறுகின்றன.

4) கர்ப, விவாஹ, உபநயனதீக்ஷைகளின் நடுவில் மாதா பிதாக்களின் மரணம் ஏற்பட்டாலும், மாதாமஹன், மாதாமஹீ, பித்ருவ்யன், அவன் பத்னீ, அம்மான், அம்மாமி, ஜ்யேஷ்டப்ராதா, அவன் பத்னீ, அத்தை, மாத்ருஸஹோதரீ, பகினீ, மாமனார், மாமியார், இவர்களின் மரணத்தில் கர்த்ருத்வம் உண்டானாலும் வபனமுண்டு.

5) மாதாபித்ரு தீக்ஷையில் பத்னீ பிரஸவித்தால் வபனமுண்டு.

6) கர்பதீக்ஷை உள்ளவனுக்கு ஸபிண்டீகரண நிமித்த வபனமில்லை.

7) ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு தீக்ஷை ஆவச்யகமில்லை. அனுஷ்டிப்பது சிலாக்யம். இல்லாவிட்டாலும் தோஷமில்லை. ஸபிண்டீகரணத்திற்கு முன் வேறு கிருத்யம் செய்தால் வபனமில்லை பின்செய்தால் தீக்ஷையை ஆசரித்தால் வபனம் இல்லை. இல்லாவிடில் உண்டு,

## 9. பிறப்புத் தீட்டு

1) 4வது மாதத்தில் கர்ப்பத்துக்கு விச்சித்தி உண்டானால் பிதாவுக்கு ஸ்நானம் மாதாவுக்கு 4 நாள் தீட்டு. 5வது 6வது மாதங்களில் விச்சித்தியுண்டானால் பிதாவுக்கும் ஸபிண்டர்களுக்கும் ஸ்நானம். 5, 6 வது மாதங்களில் பிண்டம் போல் விழுந்தால் மேல் சொன்னவர்களுக்கு 3 நாள். மாதாவுக்கு 5 மாதத்திற்கு 5 நாள். 6 மாதத்திற்கு 6 நாள்.

2) 7வது மாதம் முதல் பிறந்தது பிள்ளையானால் மாதாபிதாக்களுக்கும் ஸபிண்டர்களுக்கும் 10 நாள் தீட்டு. ஸமாநோதகர்களுக்கு 3 நாள் தீட்டு.

3) புருஷ சிசுவானால் 30 தினங்களுக்குப் பிறகும், ஸ்த்ரீ சிசுவானால் 40 தினங்களுக்குப் பிறகும் மாதாவுக்கு பாண்ட ஸ்பர்சயோக்யதை உண்டாகும்.

4) ஸ்த்ரீ சிசு பிறந்தால் அதின் பின்னோதரப்ராதா, ஸஹோதரப்ராதா, தகப்பன், தகப்பனின் ஸஹோதரன், அவனுடைய பிள்ளை, பிதாமஹன், அவனுடைய ஸஹோதரன் இவர்களுக்கு 10 நாள் தீட்டு.

5) பெண்கள் தாய் தகப்பன் வீட்டில் பிரஸவித்தாலும், அவர்களின் திரவியச்செலவினால் பிறர் கிருஹத்தில் பிரஸவித்தாலும் தாய் தகப்பன்களுக்கு 3 நாள் தீட்டு.

6) ஒரு ஸ்திரீ தன் ஸஹோதரன், சிறிய தகப்பன், பெரியதகப்பன், அம்மான், முதலிய பந்துக்கள் வீட்டில் பிரஸவித்தாலும், அவர்கள் திரவியச்சிலவினால் வேறு இடங்களில் பிரஸவித்தாலும், ஷெ பந்துக்களுக்கு 1 நாள் தீட்டு.

7) உபநயனமில்லாதவனுக்கும் ப்ரஹ்மசாரிக்கும் தீட்டில்லை.

8) ஜனனாசௌசத்திற்கு அதிக்ராந்தாசௌசம் இல்லை. பிதாவுக்கு மட்டும் ஸ்நானமுண்டு.

## 10. இறப்புத் தீட்டு

### *(1) 10நாள் தீட்டு*

1) தசராத்ர க்ஞாதிகளின் மரணத்தில் 10 நாள் ஆசௌசம்.

2) பிறந்து 10 நாளுக்கு மேல் புருஷ சிசுவின் மரணத்திலும், விவாஹம் வரையில் ஸ்த்ரீ ப்ரஜையின் மரணத்திலும் தாய் தகப்பன் பின்னோதரப்ராதா ஸஹோதரப்ராதா இவர்களுக்கு 10 நாள் தீட்டு.

3) 7வது வயது முதல் உபநயனமானாலும் ஆகாமலிருந்தாலும் புருஷப்ரஜையின் மரணத்தில் ஸபிண்டர்களுக்கு 10 நாள் தீட்டு.

## (2) புருஷர்களுக்கு 3-நாள் தீட்டு

1) மாதாமஹன்.
2) மாதாமஹீ
3) அம்மான்.
4) அம்மாமி.
5) மாமனார்.
6) மாமியார்.
7) தாயின் சஹோதரிகள்.
8) தகப்பனின் சஹோதரிகள்.
9) உபநீதனான மருமான்.
10) ஷ தௌஹித்ரன்.
11) ஷ ஸமாநோதகன்
12) விவாஹமான பெண்.
13) ஸஹோதரீ.
14) ஜனகமாதா
15) ஜனகபிதா
16) தத்தனான பிள்ளை.
17) 25வது மாதம் முதல் 6 வருஷம் முடிய உபநீதனானாலும், அனுபநீதனானாலும், தசராத்ரக்ஞாதிகளின் பிள்ளை.

18) 7வது வருஷம் முதல் விவாஹம் வரையில் க்ஞாதிகளுடைய பெண், இவர்களின் மரணத்தில் 3 நாள் தீட்டு.

मातामहौ मातुलमातुलान्यौ मातृष्वसा पुत्र्यपि तत्सुतश्च ।
पितृष्वसा च स्वसृतत्तनूजौ पत्न्यां स्थितायामथवा प्रजायाम्॥
सत्याममुष्याः श्वशुराविति द्वादशैव तेषामुपनीतिभाजाम् ।
मृतौ पुमांसः प्रतियोगिनश्चेत् शुद्धाः स्युरुद्वाहकृतस्त्रिरात्रात्॥

### (3.) புருஷர்களுக்கு பக்ஷிணித் தீட்டு.

1) அத்தையின் பிள்ளை, பெண்.
2) அம்மானுடைய பிள்ளை, பெண்.
3) தாய் ஸஹோதரியின் பிள்ளை, பெண்.
4) ஸஹோதரியின் பெண்.
5) ஸோதரனுடைய கல்யாணமான பெண்.
6) பித்ருவ்யனுடைய பெண்.
7) பௌத்ரீ.
8) தௌஹித்ரீ.
9) 3 வயதுக்கு மேல் உபநயனமில்லாத மருமான், தௌஹித்ரன் இவர்கள்.

இவர்களின் மரணத்தில் பக்ஷிண்யாசௌசம். பக்ஷிணி என்பது இரண்டு இரவும், ஒருபகலும், அல்லது இரண்டு பகலும் ஒரு இரவும் உள்ள காலம்.

पितृष्वसुर्मातृसहोदरस्य मातृष्वसुश्चापि च पुत्रपुत्र्यः।
सहोदरस्यापि तथा भगिन्याः पुत्रस्य पुत्र्याः पितृसोदरस्य॥
पुत्र्यस्तथैकादशसम्मितानाम् एषां जनानामुपनीतिभाजाम्।
मृतौ पुमांसः प्रतियोगिनश्चेत् पक्षिण्यनुष्ठेयतयाऽभ्युपेया॥

### (4) புருஷர்களுக்கு 1 நாள் தீட்டு.

1) ஸபத்னீ மாதாவின் ஸஹோதரன், ஸஹோதரி, பெண்.
2) மேல்கண்ட மூவர்களுடைய பெண், பிள்ளை.
3) மைத்துனன்.

4) பின்னோதரர்களான சிறியதகப்பன், பெரியதகப்பன், இவர்களின் பெண்.
5) பின்னோதர ப்ராதாவின் பெண்.
6) பின்னோதர அத்தை.
7) ஷெ யாளுடைய பெண், பிள்ளை.
8) ஸபத்னீமாதாவின் தகப்பன், தாயார்.
9) 25வது மாதம் முதல் 6 வருடம் முடிவு வரையில் விவாஹமாகாத க்ஞாதியின் பெண்.
10) ஜனகப்ராதா.
11) ஜனக ஸபிண்டன்.
12) பத்னீ, அவள் ஸந்ததி இரண்டுமில்லாத விஷயத்தில் மாமனார், மாமியார்.
13) 6 மாதத்திற்கு மேல் 24 மாதத்திற்குட்பட்ட க்ஞாதியின் பிள்ளை.
இவர்களின் மரணத்தில் 1 நாள் ஆசௌசம்.
भ्राता विमातुः स्वसृपुत्रिके द्वे तेषामपत्यं पितरौ विमातुः।
श्यालस्तथा भिन्नपितृव्यभिन्नभ्रात्रोस्तु पुत्र्यौ च पितृष्वसाऽस्याः
प्रजा इमे सप्तदशैव तेषां मृतौ विशुद्धः पुरुषो दिनेन॥

## (5) ஸ்த்ரீகளுக்கு பர்தாவுக்கு ஏற்படுகிற தீட்டைத்தவிர தனியாய் ஏற்படும் தீட்டு

### (1) ஸ்த்ரீகளுக்கு 3 நாள் தீட்டு.

1) உபநயனமான ஸோதரன்.
2) உபநயனமான மருமான்.
3) உபநயனமான ஸோதரியின் பிள்ளை.
4) ஸபத்னீமாதா.
இவர்களின் மரணத்தில் 3 நாள் ஆசௌசம்.
सहोदरस्तत्तनयः सपत्नीमाता भगिन्यास्तनयश्चतुर्णाम्।
एषां जनानामुपनीतिभाजां मृतौ स्त्रियश्चेत्प्रतियोगिभाजः॥
शुध्यन्ति रात्रित्रितयेन भर्तुराशौचमप्यभ्युपगम्यमाभिः॥

## (2) ஸ்த்ரீகளுக்கு பக்ஷிண்யாசௌசம்.

1) பித்ருவ்யன்.
2) தாயின் சஹோதரி.
3) மாதுலன்.
4) பித்ருஸோதரீ
5) மேல்கண்ட நால்வர்களுடைய பெண், பிள்ளை.
6) பிதாமஹன்.
7) பிதாமஹீ
8) மாதாமஹன்.
9) மாதாமஹீ
10) தம்பி தமயனுடைய பெண்.
11) ஸஹோதரீ
12) ஷை யாள் பெண்

இவர்களின் மரணத்தில் பக்ஷிண்யாசௌசம்.

पितृव्यमातृष्वसृमातुलाश्च पितृष्वसैषामपि पुत्रपुत्र्यः।
मातामहौ भ्रातृसुता स्वसा तत्सुता च पौत्री च पितामहौ च॥
पुत्र्यास्सुतैकाधिकविंशतेस्तु जनस्य मृत्यां विहितोपनीतेः।
यदि स्त्रियः तत्प्रतियोगिभाजः पक्षिण्यनुष्ठेयतयाऽभ्युपेया॥

## (3) ஸ்த்ரீகளுக்கு 1 நாள் தீட்டு.

1) ஸபத்னீமாதாவின் ப்ராதா, பகினீ, புத்ரன், புத்ரீ
2) மேல்சொன்ன 4 பேர்களின் பெண்கள், பிள்ளைகள்.
3) பின்னோதர பித்ருவ்யன், பின்னோதர அத்தை.
4) ஷை இவர்களுடைய பெண்கள், பிள்ளைகள்.
5) ஸபத்னீமாதாவின் தாயார், தகப்பனார்,

இவர்களின் மரணத்தில் 1 நாள் ஆசௌசம்.

भ्राता विमातुः स्वसृपुत्रपुत्र्यः तेषामपत्यं पितरौ विमातुः।
भिन्नः पितृव्यश्च तथैव भिन्नपितृष्वसा किञ्च तयोः प्रजाश्च॥
एषां मृतौ विंशतिसम्मितानां दिनेन शुध्येत्प्रतियोगिनी स्त्री ॥

## (6) ஸத்ய:சௌசம் (ஸ்நானமாத்ரம்)

ஒருவரின் மரனத்தை கேட்டவுடன் கட்டின வஸ்த்ரத்துடன் ஸ்நானம் செய்யவேண்டும். இந்த ஸ்நானம் செய்யும் வரையிலுள்ள ஆசௌசத்திற்கு ஸத்ய:சௌசம் என்று பெயர். இது -- யாகம் செய்பவர், செய்விப்பவர், (ருத்விக்-யஜமானர்கள்) ப்ரம்ஹசாரி, வ்ரதம் மேற்கொண்டவர், ப்ரம்ஹக்ஞாள், -- இவர்களுக்கும், தானகாலத்திலும், விவாஹகாலத்திலும், யாககாலத்திலும், யுத்தகாலத்திலும், தேச உபத்ரவ காலத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது என்று அறியவும்.

ऋत्विजां दीक्षितानां च याज्ञिकं कर्म कुर्वताम्।
सत्रिव्रतिब्रह्मचारिदातृब्रह्मविदां तथा ॥
दाने विवाहे यज्ञे च सङ्ग्रामे देशविप्लवे।
आपद्यपि च कष्टायां सद्यःशौचं विधीयते॥

मातृष्वसुश्चापि पितृष्वसुश्च पुत्र्या भगिन्याः पतयो जना ये ।
तेषां मृतौ वा पितृभागिनेयपत्नी च या मातुलपुत्रपत्नी॥
तयोर्मृतौ बन्धुमृतावपीत्थं शुध्यन्ति सद्यः पुरुषाः स्त्रियश्च।
स्त्रीणां विशेषोऽत्र पितृव्यपत्न्याः स्यान्मातुलान्या निधने च सद्यः॥

-------------------

## 11 தீட்டுச்சேர்க்கை

### (1) பிறப்புத்தீட்டில் பிறப்புத்தீட்டு.

1) 3 நாள் தீட்டில் மற்றொரு 3 நாள் தீட்டு வந்தால் முன் தீட்டோடே போய்விடும்.

2) 10 நாள் தீட்டில் மற்றொரு 10 நாள் தீட்டு வந்தால் முன்தீட்டோடு போய்விடும்.

3) 3 நாள் தீட்டு மத்தியில் 10 நாள் தீட்டு வந்தாலும், பின் சொன்னதில் முன் சொன்னது

வந்தாலும் 10 நாள் தீட்டின் முடிவில் தான் தீட்டுப்போகும்.

4) ஒரு தீட்டின் நடுவில் ஒரு சிசு பிறந்தால் அதின் தாய் தகப்பன்களுக்கு மட்டில் பிறந்தது முதல் 10 நாள் தீட்டு உண்டு.

5) 10 நாள் தீட்டின் 10வது நாள் ராத்திரியில் மற்றொரு ஸமமான தீட்டு வந்தால் பிறகு 2 நாளும், 10வது நாள் ராத்திரி 4 வது யாமத்திலாவது அருணோதயத்திலாவது வந்தால் பிறகு 3 நாளும் அதிகத் தீட்டுண்டு.

6) 10 நாள் தீட்டின் மத்தியில் 3நாள் தீட்டு எப்போது வந்தாலும் அதற்காக விசேஷமில்லை.

7) ஒருவன் தனக்கு சிசு பிறந்து தீட்டுக்கார்த்துக் கொண்டிருக்கும் பொழுது 10வது நாள் ராத்திரியில் எப்போதானாலும் வேரு ஜனனாசௌசம் வந்தால் அதிகத்தீட்டு இல்லை.

8) ஒரு தீட்டுக்கார்த்துக் கொண்டிருக்கும் போது இந்தத்தீட்டின் ஆரம்பத்திற்கு முந்தியே ஜனனமானதாக ஒரு தீட்டு வந்தால் முதலில் கேட்ட தீட்டின் முடிவிலேயே தீட்டுப்போகும்.

## 2. பிறப்புத்தீட்டும், இறப்புத்தீட்டும்

1) பிறப்புத் தீட்டைக் காட்டிலும் இறப்புத்தீட்டு பலமானது. இறப்புத்தீட்டுடன் பிறப்புத் தீட்டு போய் விடும். பிறப்புத் தீட்டுடன் இறப்புத்தீட்டு போகாது.

2) ஆனால் ஒருவன் தனக்கு சிசு பிறந்து தீட்டுக்கார்த்துக் கொண்டிருக்கும் போது க்ஞாதி மரணாசௌசம் ஏற்பட்டால் அது ஜனனாசௌசத்தோடு போய்விடும்.

3) தாய் தகப்பன் தங்களுக்கு சிசு பிறந்து தீட்டுக்கார்த்துக் கொண்டிருக்கும் போது அந்த சிசு இறந்தால் இறப்புத்தீட்டு அதிகமில்லை. 10வது நாளில் சிசு இறந்தால் 2 நாளும், அன்று 8வது யாமத்தில் இறந்தால் 3 நாளும் அதிகத்தீட்டுண்டு, மற்றவர்களுக்கு அதிகத்தீட்டு கிடையாது.

4) க்ஞாதி மரணாசௌச மத்யத்தில் சிசு பிறந்தால் தாய் தகப்பன்களுக்கு மட்டும் பிறந்தது முதல் 10 நாள் தீட்டுண்டு.

5) ஒருவனுக்கு மாதாபிதாக்களின் மரணாசௌச மத்யத்தில் சிசு பிறந்தால் அந்த ஜனனாசௌசம் மரணாசௌசத்தோடு போய்விடும். சிசுவின் தாயாருக்கு மட்டும் ஜனனம் முதல் 10 நாள் தீட்டு.

6) ஸமமாயிருந்தாலும் அல்பமாயிருந்தாலும் இறப்புத்தீட்டுடன் பிறப்புத்தீட்டு போய்விடும்.

## (3) இறப்புத்தீட்டில் இறப்புத்தீட்டு.

1) 10 நாள் தீட்டில் வேறொரு 10 நாள் தீட்டு வந்தால் முந்திய தீட்டோடு பிந்திய தீட்டும் போய்விடும்.

2) 3 நாள் தீட்டில் 10 நாள் தீட்டு வந்தாலும், பின்சொல்லியதில் முன்சொல்லியது வந்தாலும் 10 நாள் தீட்டின் முடிவிலேயே தான் தீட்டுப்போகும்.

3) க்ஞாத்யாசௌசத்தில் மாதா பிதாக்கள் இறந்தால் பிள்ளைகளுக்கும், பத்னி இறந்தால் பர்த்தாவுக்கும், பர்த்தா இறந்தால் பத்னிக்கும், பிள்ளை பெண் இறந்தால் தாய் தகப்பன்களுக்கும், மரணம் முதல் 10 நாள் ஆசௌசமுண்டு. க்ஞாத்யாசௌசத்தோடு நிவ்ருத்தி இல்லை.

4) 10 நாள் தீட்டில் 10வது நாள் ராத்திரியில் வேறு சமமான தீட்டு வந்தால் 2 நாளும், அன்று ராத்திரி 4 யாமத்திலாவது அருணோதயத்திலாவது வந்தால் 3 நாளும் அதிகாசௌசமுண்டு.

5) 10 நாள் தீட்டில் 3 நாள் தீட்டு எப்போது வந்தாலும் அதற்காக அதிகாசௌசமில்லை.

6) பிதா இறந்து 10 நாளைக்குள் மாதா இறந்தால் பிதாவின் ஆசௌச காலத்திற்கு மேல் பக்ஷிண்யாசௌசமதிகமுண்டு. மாதாவின் தசராத்ர மத்யத்தில் பிதா இறந்தால் பிதாவின் மரணதினம் முதல் 10 நாள் ஆசௌசமுண்டு.

7) பிதாவின் தசமதினத்தில் மாதா எப்போது இறந்தாலும் அதற்காக பக்ஷிண்யாசௌசம் தான். அதிகமில்லை.

8) தாய் தகப்பன் இறந்து 10 நாளைக்குள் பத்னி, பிள்ளை, பெண் இவர்கள் இறந்தால் முந்திய ஆசௌசத்தோடு பிந்திய ஆசௌசமும் போய்விடும். 10வது நாளில் இறந்தால் முன்சொல்லியபடி 2 அல்லது 3 நாள் அதிகமாக ஆசௌசமுண்டு.

9) தாய், தகப்பன், பத்னி, பர்த்தா, பிள்ளை, பெண் இவர்கள் இறந்த 10வது நாளில் வேறு க்ஞாதிமரணம் ஏற்பட்டால் முன் தீட்டோடு பிந்திய தீட்டும் போய்விடும்.

10) 10 நாள் ஆசௌசம் கார்த்துக் கொண்டிருக்கும் போது வேறொருவனை தஹனம் செய்ய நேர்ந்தால் தஹன தினம் முதல் 10 நாள் ஆசௌசம். மறுபடியும் வேறு தஹனம் செய்ய நேர்ந்தால் முன் ஆசௌசத்தோடு பிந்தியதும் போய்விடும்.

## 12 ஸம்ஸ்காரத்தினால் அதிகத்தீட்டு.

1) தத்தனாய் போனவன் தன்னுடைய ஜனக-மாதா, ஜனகபிதா இவர்களுக்கும், தௌஹித்ரன், மாதாமஹன், மாதாமஹீ இவர்களுக்கும், ஸமாநோதகன் ஸமாநோதகனுக்கும் கர்தாவாயிருந்தால் 10 நாளாசௌசமுண்டு.

2) க்ஞாதியல்லாத ஒருவனுக்கு, கர்தா வேறொருவன் இருக்கும் போது வேறொருவன் தஹனம் செய்தால் 3 நாள் ஆசௌசமுண்டு. கர்தா வந்து விட்டால் உடனே தீட்டுப் போய்விடும். ஸஞ்சயனத்திற்கு பிறகு கர்த்தா வந்தால் 10 நாளாசௌசமுண்டு. ஆசௌச்யன்னபோஜனம் (आशौच्यन्नभोजनं) செய்தால் உதகதானமுமுண்டு.

3) பக்ஷிண்யாசௌசக்காரன் தஹனம் செய்து பிறகு கர்த்தா வந்தால் 3 நாளாசௌசம். ஸஞ்சயனத்திற்குப் பிறகு வந்தால் 10 நாளாசௌசமும் உதகதானமுமுண்டு.

4) 3 நாள் தீட்டுள்ள சமானோதகன் தஹனம் செய்தால் கர்தா ஸஞ்சயனத்திற்கு முன் வந்தாலும் பின் வந்தாலும் 10 நாளாசௌசமும் உதகதானமுமுண்டு.

5) ஸபிண்டன் கர்தாவாக இருக்கும் விஷயத்தில் 10 நாளுக்கு மேல் கேட்டால் புநர்தஹனம் முதல் செய்து தனக்குத்தீட்டு இருக்கிற வரையில் பிண்டோதகதானம் செய்து தீட்டுப்போகிற தினத்தில் ஏகோத்திஷ்டத்தையும் மறுநாள் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது. ஒரு வருஷத்திற்குப் பிறகு கேட்டால் ஒரே நாளில் புநர்தஹனம், பிண்டதானம், உதகதானம் இவைகளை முடித்து மறுநாளில் ஏகோத்திஷ்டத்தையும் 3வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

## 13 அதிக்ராந்தாசௌசம்.

1) 10 நாளாசௌசத்தை 10 நாளுக்குப் பிறகு 3 மாதங்களுக்குள் கேட்டால் 3 நாளாசௌசம். 6 மாதங்களுக்குள் கேட்டால் பக்ஷிண்யாசௌசம். ஒரு வருஷத்திற்குள் கேட்டால் 1 நாளாசௌசம். பிறகு கேட்டால் ஸ்னானமாத்திரம்.

2) 3 நாளாசௌசத்தை 3 நாள்களுக்கு மேல் 10 நாட்களுக்குள் கேட்டால் ஒருநாள் ஆசௌசம். பிறகு கேட்டால் ஸ்னானமாத்திரம்.

3) பக்ஷிணித்தீட்டை பக்ஷிணிக்கு மேல் 10 நாள்களுக்குள் கேட்டால் ஒருகாலம். அதாவது பகலில் கேட்டால் பகல். ராத்திரியில் கேட்டால் ராத்திரி. பிறகு கேட்டால் ஸ்னானமாத்திரம்.

4) 25வது மாதம் முதல் 6வது வருஷம் முடிவு வரையில் க்ஞாதியின் பிள்ளை இறந்தால் அவன் உபநீதனானாலும், அனுபநீதனானாலும் 3 நாளாசௌசமுண்டென்று சொன்னதற்கு அதிக்ராந்தாசௌசம் கிடையாது.

5) ஒரு நாளாசௌசத்திற்கு அதிக்ராந்தாசௌசம் கிடையாது.

6) மாதாபிதாக்களின் மரணத்தில் மூத்த புத்திரனுக்கும், பர்தாவின் மரணத்தில் பத்னிக்கும் எப்பொழுது கேட்டாலும் 10 நாள் ஆசௌசமுண்டு.

7) ஸபத்னீமாதாவின் மரணத்தை ஒரு வருஷம் சென்ற பின் கேட்டால் 3 நாளாசௌசம். ஸஹகளத்திரங்களுக்கும் 3 நாளாசௌசம். ஒரு வருஷத்திற்குள் கேட்டால் 10 நாளாசௌசம்.

8) மாதாபிதாக்களுக்கு மூத்தபுத்திரனால் க்ருத்யங்கள் செய்யப்பட்டு பிறகு 2வது முதலான

பிள்ளைகள் ஒரு வருஷத்திற்கு மேல் கேட்டால் 3 நாளாசௌசம்.

9) க்ருத்யம் செய்யப்பட்டிருந்தாலும், செய்யப்படா-மலிருந்தாலும் மாதாபிதாக்களின் மரணத்தை மூத்த குமாரன் எப்போது கேட்டாலும் கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்கார்த்து ஸபிண்டீகரணம் முதலான யாவற்றையும் செய்ய வேண்டியது.

10) ஸஹோதர மரண விஷயத்தில் க்ருத்யம் செய்யப்பட்டிருந்தால் 6 மாதத்திற்குள் கேட்டால் 3 நாளாசௌசம். பிறகு கேட்டால் பக்ஷிண்யாசௌசம். க்ருத்யம் செய்யப்படாத விஷயத்தில் க்ருத்யம் செய்யும் ஸஹோதரனுக்கு எப்போதும் 10 நாளாசௌசம். மற்ற ஸஹோதரர்களுக்கு 6 மாதத்திற்குள் 10 நாளும், ஒரு வருஷத்திற்குள் 3 நாளுமாசௌசம்.

11) 10 நாள் தீட்டை 10வது நாள் ராத்திரியிலும், 3 நாள் தீட்டை 3வது நாள் ராத்திரியிலும் கேட்டால் உதகதானத்திற்காக மறுநாளுமாசௌசமுண்டு.

---

## 14 ஆசௌசமில்லாதவர்கள்.

1) அனுபனீதன், ப்ரம்ஹசாரி, இவர்களுக்கு ஸம்ஸ்காராதிகளால் தத்தத்காலத்தில் வரும் ஆசௌசத்தைத் தவிற மற்ற காலங்களில் ஆசௌசம் கிடையாது.

---

## 15 ஆத்யச்ராத்தம்

1) இறந்த தினம் முதல் 11வது நாளில் ஆத்யச்ராத்தம் செய்ய வேண்டியது. விக்னம் ஏற்பட்டால் 12, 23, 27வது நாள்களில் பிண்டோதகதானத்தை மறுபடி செய்து ஊனமாஸிகத்திற்கு முன் செய்ய வேண்டியது.

வேறு ஆசௌசம் வந்தால் அதன் நிவ்ருத்திக்கு பிறகு ஆவ்ருத்தாத்யத்தைச் செய்ய வேண்டியது.

2) பிதாவின் க்ருத்யமத்யத்தில் மாதாவிற்கு அல்லது இதரர்களுக்கு மரணம் நேர்ந்தாலும், அந்தந்த 11வது தினத்தில் ஆத்யத்தையும், ஆசௌசம் போன பின் ஆவ்ருத்தாத்யத்தையும் செய்ய வேண்டியது.

3) 11வது தினத்தில் ஸங்கடம் நேர்ந்து விட்டால் ஆவ்ருத்தாத்யத்தை பிறகு நாள் பார்த்து செய்ய வேண்டியது.

4) ஆவ்ருத்தாத்யத்தை ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு செய்யக்கூடாது. ஆனால் மலமாஸத் திலிறந்தால் ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு சுத்தமாஸ ம்ருத திதியில் ஆவ்ருத்தாத்யத்தைச் செய்ய வேண்டும்.

5) ஆத்யச்ராத்தம் 11வது நாளில் செய்யப்படா விட்டால் ஸஞ்சயனமாகாமலிருந்தால் புநர்தஹனம் முதல் பிண்டோதகதானம் முதலிய யாவற்றையும் செய்து ஆத்யம் செய்ய வேண்டியது. ஸஞ்சயனம் செய்யப்பட்டிருந்தால் பிண்டோதக-தானம் முதல் யாவற்றையும் செய்து ஆத்யத்தைச் செய்ய வேண்டியது.

----------------

## 16 ஸபிண்டீகரணம்

1) மரணதினம் முதல் 12வது நாளில் முக்யகர்தா ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது.

2) மாதாபிதாக்களைத் தவிர மற்றவர்கள் விஷயத்தில் 12வது தினத்திலுங்கூட நாள் பார்த்துச் செய்ய வேண்டியது.

3) 12வது நாளில் செய்யா விட்டால் 12வது நாள் முதல் 17 நாள் வரையிலாவது, 23வது நாள்,

த்ரிபக்ஷம், 3, 4, 6, 11 வது மாதங்கள், வத்ஸராந்தம் இவைகளிலாவது செய்ய வேண்டியது

4) மாதாபிதாக்களின் விஷயத்தில் 12நாள் முதல் 17நாள் வரையில் நாள் பார்க்க வேண்டியதில்லை. பிறகு நாள் பார்க்க வேண்டும்.

5) ஜன்ம நக்ஷத்திரம், த்ரிபதநக்ஷத்திரம் (கண்ட) ஞாயிறு, செவ்வாய், வியாழன், வெள்ளி, சனி, சதுர்தசீ இவைகள் கூடாது.

6) ரோஹிணீ, திருவாதிரை, கேட்டை, அனுஷம், ஹஸ்தம், இவைகள் சிலாக்யம். கர்தாவின் நக்ஷத்திரத்திற்குப் பொருத்தம் பார்த்தே செய்ய வேண்டியது.

7) ஒருவனுக்கு அனேக பார்யைகளிருந்தால் மூத்தவளே ஸபிண்டீகரணத்தை செய்ய வேண்டியது. அனேகம் பிள்ளைகளிருந்தால் மூத்தவனே செய்யவேண்டியது. மூத்தவன் விதுரனாயிருந்தால் அவனுக்கு அடுத்த ஸாக்னிகன் செய்யவேண்டியது. பிறகு மூத்தவன் விவாஹம் செய்து கொண்டு ஸாக்னிகனாயானால் மறுபடி ஸபிண்டீகரணத்தை பார்வண விதியாய் செய்ய வேண்டியது. [இது யஜுர்வேதவிஷயம்]

8) 12 வயது முடியாத ப்ரஹ்மசாரிக்கு ஸபிண்டீகரணமில்லை. நாராயணபலி மட்டும்தான். ஆப்திக, ப்ரத்யாப்திகங்கள் கிடையாது.

9) அனுபனீதன், அனூடா இவர்களுக்கு 12 வயதுக்கு மேல் ஆனாலும் ஸபிண்டீகரணாதிகள் இல்லை.

10) விவாஹமானவர்களுக்கு எவ்வளவு வயதாயிருந்தாலும் ஸபிண்டீகரணாதிகளுண்டு.

11) 3 நாள் ஆசௌசமுள்ள ஸமானோதகன், தௌஹித்ரன், தத்தனாய் போனவன் இவர்கள் கர்த்தாவாக ஆனால் 10 நாளாசௌசமனுஷ்டித்து 12வது நாளில் ஸபிண்டீகரணத்தை செய்ய வேண்டியது.

12) பக்ஷிண்யாசௌசமுள்ளவர்கள் கர்த்தாவாக ஆனால் 3 நாளாசௌசமனுஷ்டித்து 4வது நாளில் ஏகோத்திஷ்டத்தையும் 5வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்யவேண்டியது.

13) பந்துக்கள் கர்த்தாவானால் 3வது நாளில் ஏகோத்திஷ்டத்தையும், 4வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்யவேண்டியது.

14) பிதாவின் தசாஹமத்யத்தில் மாதா இறந்தால் பிதாவின் ஸபிண்டீகரணத்தை த்ரிபக்ஷாதி காலத்தில் செய்யவேண்டியது. மாதாவின் தசாஹமத்யத்தில் பிதா இறந்தால் மாதாவின் ஸபிண்டீகரணத்தை த்ரிபக்ஷாதி காலத்தில் செய்யவேண்டியது.

15) மாதாபிதாக்கள் இறந்த வருஷத்தில் வேறொருவருக்கும் ஸபிண்டீகரணத்தை செய்யக் கூடாது. ஆனால் 1. பத்னீ, 2. புத்திரன், 3. பௌத்திரன், 4. ப்ராதா, 5. ப்ராத்ருபுத்ரன், 6. நாட்டுப்பெண், 7. ஸஹோதரீ, இந்த ஏழு பேர்களும் மாதாபிதாக்களின் ஸபிண்டீ கரணத்திற்கு முன் இறந்தால் த்ரிபக்ஷாதி காலத்திலும் பின் இறந்தால் அததின் 12வது நாளிலும் ஸபிண்டீகரணத்தை செய்ய வேண்டும்.

16) மாதாபிதாக்களுக்கு ஸபிண்டீகரண ஹோமத்தை ஔபாஸநாக்னியில் செய்ய வேண்டியது ஆவச்யகம். கர்த்தா அக்னிமானாக இல்லாவிட்டால் தன்னுடைய அக்னியில்

செய்யவேண்டியது. அநேகம் ப்ராதாக்களிருந்து மூத்தவன் அக்னிமானாயில்லாதவனாய் இருந்தால் அவனுக்கடுத்த அக்னிமான் செய்யவேண்டியது. [இது யஜுர்வேதவிஷயம்] மூத்தவனுக்கு பத்னி அனுகூலையாயில்லாமல் ப்ரதிகூலையாயிருந்தால் வருஷ முடிவு வரையில் ஸபிண்டீகரணத்திற்கு காலமிருப்பதால் அதுவரையில் ப்ரதீக்ஷித்து அப்போதும் ப்ரதிகூலையாயிருந்தால் அடுத்த அக்னிமான் செய்யவேண்டியது. ப்ராதாக்களில்லாதவன் 12வது நாளில் யதாசக்தி க்ருச்ரங்களால் ஆத்மசுத்தி செய்துகொண்டு பத்னிக்கு ப்ரதிநிதி செய்து கொண்டு ஸபிண்டீகரணத்தை செய்யவேண்டியது. பத்னீ அனுகூலையாயிருந்து புருஷன் நிஷ்காரணமாய் ப்ரதிகூலனாயிருந்தால் அதற்கு யாதொரு விதானமுமில்லை. இவ்விதம் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

17) கர்த்தாவுக்கு அநேக பத்னிகள் இருந்தால் அக்னி ஸம்ஸர்கம் செய்யப்பட்டிருந்தால் எந்த பத்னியைக்கொண்டாவது ஔபாஸனாரம்பம் செய்துகொண்டு ஸபிண்டீகரணத்தைச் செய்யலாம். அக்னி ஸம்ஸர்கமாகாத பக்ஷத்தில் மூத்தவளை வைத்துக்கொண்டு செய்யவேண்டியது அவள் ப்ரதிகூலையாயிருந்தால் முன் பாராவில் சொல்லியபடி செய்யவேண்டியது.

*18) ஸபிண்டீகரணத்தில் ஷட்பிண்டிகளுக்கு ஹோமம் வரணம் முதலிய விஷயங்களைக் காட்டும் பட்டிகை ஒன்று பிந்தி சேர்க்கப்பட்டிருக்கிறது.*

19) விஷ்ணுவரணமில்லாமல் ஸபிண்டீகரணத்தைச் செய்யவே கூடாது. விஷ்ணுவரணம் இல்லாமல் ச்ராத்தம் செய்கிற சிலர் ஸபிண்டீகரணத்தில் விஷ்ணுவரணம் செய்தால் ஆப்திக

ப்ரத்யாப்திகங்களிலும் அது ஆவச்யகமென்று தப்பெண்ணங்களோடு விஷ்ணுவரணமில்லாமல் ஸபிண்டீகரணஞ்செய்கிறார்கள். அது யுக்தமல்ல. ஸபிண்டீகரணத்திற்கும் ஆப்திக ப்ரத்யாப்திகங் களுக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. தவிற ஒருதடவை விஷ்ணுவரணத்துடனோ, விஷ்ணுவரணம் இல்லாமலோ ச்ராத்தம் செய்தால் எப்போதும் அதேவிதம் செய்யவேண்டுமென்ற நியமமில்லை. தேசகால தனங்களை அனுசரித்து மாற்றிச்செய்வதினால் லோபமில்லையென்று பெரியோர்களின் அபிப்பிராயம்.

---------------------------

## 17 ஸோதகும்பம்

1) மரணதினம் முதல் 12வது நாளில் துவக்கி ஆப்திகம் வரையில் மாஸிக ஊனமாஸிக தினங்கள் தவிர பிரதிதினமும் ஸோதகும்ப ச்ராத்தம் செய்யவேண்டியது. அல்லது மாஸிகதினத்திற்கு முன்தினத்தில் செய்யவேண்டியது.

2) ப்ரதிதினம் செய்யும் விஷயத்தில் காரணவசத்தால் நின்று போன ஸோதகும்பத்தை மறுநாளில் சேர்த்துச் செய்யவேண்டும்.

3) மாதத்திற்கு ஒருதடவை செய்யும் விஷயத்தில் நின்று போனால் அதற்கு வேறு காலமில்லை.

4) ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யப்படும் ஸோதகும்பங்களில் ஏகோத்திஷ்டமாக (ப்ரேதவரணமாக) வரணம் செய்யவேண்டியது.

-------------------

## 18. ஊனமாஸிகம்

1) ஊனமாஸிகங்களை நாள் பார்த்து விஹித காலத்தில் செய்யவேண்டியது.

2) 27வது நாளுக்கு மேல் 30 நாள்களுக்குள்ளும், 40வது நாளுக்குமேல் 45 நாள்களுக்குள்ளும், 170வது நாளுக்குமேல் 180 நாள்களுக்குள்ளும், 340வது நாளுக்கு மேல் 355 நாள்களுக்குள்ளும் ஊனமாஸிகங்களை செய்யவேண்டியது. அந்தந்த காலங்களில் செய்யத் தவறினால் வேறு காலம் கிடையாது.

3) வெள்ளிக்கிழமை, நந்தை, ( ப்ரதமா, ஷஷ்டீ, ஏகாதசீ, ) சதுர்தசி, ஸினீவாலி, தர்சம், க்ருத்திகா, ஆச்லேஷா, பூர்வபல்குனீ, ஜ்யேஷ்டா, மூலம், பூர்வாஷாடா, பூர்வப்ரோஷ்டபதா, த்ரிபுஷ்கரம், த்விபுஷ்கரம், இவைகளில் செய்யக்கூடாது. த்விதீயா, ஸப்தமீ, த்வாதசீ, என்ற பத்ரா திதிகள், ஞாயிறு, செவ்வாய், சனி, இம்மூன்று வாரங்கள், புனர்வஸு, உத்தரபல்குனீ, விசாகா, உத்தராஷாடா, பூர்வப்ரோஷ்டபதா, இந்த த்ரிபாத நக்ஷத்ரங்கள். இவைகளுள் 3 சேர்ந்தால் த்ரிபுஷ்கரம், 2 சேர்ந்தால் த்விபுஷ்கரம்.

सप्तविंशदिनादूर्ध्वं त्रियहस्सूनमासिकम्।
चत्वारिंशद्दिनादूर्ध्वं पञ्चाहस्सु त्रिपक्षकम्॥
तथा दशसु षाण्मासं सप्तत्यतिशतात्परम्।
तथा पञ्चदशाहस्सु चत्वारिंशच्छतत्रयात्॥

द्विपुष्करेषु नन्दासु दर्शे भार्गववासरे।
चतुर्दश्यां न कुर्वीत ऊनानि त्रीणि वह्निभे॥
भानुभौमशनैश्चरवाराणां भद्रतिथीनां त्रिपादनक्षत्राणाम्।
सम्मेलने त्रिपुष्करः द्वयोर्योगे द्विपुष्करः॥

4) தோஷமற்ற காலம் கிடைக்காவிட்டால் அந்தந்த காலங்களின் கடைசி தினத்தில் செய்ய வேண்டியது.

5) ஊனமாஸிகங்கள் நாள்கணக்கின் பேரிலேர்படுவதால் அவைகளுக்கு மலமாஸாதி தோஷங்கள் கிடையாது.

6) ஊனமாஸிகங்களை நாள்கணக்கின் பேரில் செய்யவேண்டுமே தவிற இந்த மாஸிகத்திற்குப்பின், இந்த மாஸிகத்திற்குமுன் என்ற நியமம் இல்லை.

---

## 19. மாஸிகம்

1) மாஸிகத்தை மாதந்தோறும் இறந்த திதியில் செய்யவேண்டியது.

2) ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யும் மாஸிகங்களை ஏகோத்திஷ்டமாகவும், பின் செய்யும் மாஸிகங்களை ச்ராத்தம் போலவும் செய்யவேண்டியது.

3) தீட்டினால் நின்று போன மாஸிகத்தை தீட்டுப்போகின்ற தினத்திலேயே செய்யவேண்டியது. ஸபிண்டீகரணத்திற்கு முன் ஏகோத்திஷ்டமாகச்செய்யும் மாஸிகத்தை அடுத்த மாஸிகத்துடன் சேர்த்துச் செய்தாலும் செய்யலாம்.

4) அதிகமாஸம் வந்தால் இரண்டு மாஸங்களிலும் செய்யவேண்டியது.

5) மலமாஸத்தில் மறித்தவர்களுக்கு 11வது நாளில் ஆத்யம் செய்து, சுத்த மாஸத்தில் ஆவ்ருத்தாத்யமும் ஊனமாஸிகமும் செய்து, பிறகு 2வது மாஸத்தில் வருகிற திதியில் த்விதீயானுமாஸிகம் செய்யவேண்டியது.

6) ஆப்திகம் மலமாஸத்தில் வந்தால் அதிலேயே செய்யவேண்டியது.

7) ஒரு மாஸத்தில் இரண்டு திதிகளிருந்து சூன்ய திதியான முதல் திதியில் இறந்தவனுக்கு அதே மாதத்தில் பின்வரும் திதியில் அதிக த்விதீயானு மாசிகமென்று மாஸிகம் செய்யவேண்டும். விடக்கூடாது.

8) ஒருமாஸத்தில் திதியே இல்லாவிட்டால் முந்திய மாதத்தின் திதியில் சேர்த்துச் செய்யவேண்டியது. உதாஹரணம்- மார்கழி மாதத்தில் திதியே இல்லாமல் கார்த்திகை மாதக்கடைசியில் "வ்ருச்சிகசாப சுக்ல பஞ்சமீ திதி" என்று பஞ்சாங்கங்களால் தெரிந்து இரண்டு மாஸத்தியதிதி ச்ராத்தங்களும் செய்யப்பட்டு வருகின்றன அல்லவா? அது போன்ற திதியில் ஒருவன் இறந்தால் அவனுக்கு"வ்ருச்சிக சுக்ல பஞ்சமீ திதி" தான் ம்ருததிதி. மார்கழி மாதத்தில் சுக்ல பஞ்சமீ திதியில்லாததால். த்விதீய மாஸிகத்தை 11வது நாளில் ஆத்யம் செய்தபின் ஆவ்ருத்தாத்யம் செய்யும் போது இரண்டு பிராம்மணர்களை வைத்து ஆவ்ருத்தாத்யத்திற்கென்றும், த்விதீய மாஸிகத்திற்கென்றும், தனித்தனியாக ஏகோத்திஷ்டமாக வரணம் செய்து ஆவ்ருத்தாத்யத்துடன் செய்யவேண்டும்.

9) இறந்த வருஷத்தின் மத்தியில் முன்சொல்லியபடி திதி வந்தால் இரண்டு மாதத்திய மாஸிகங்களையும் சேர்த்துச் செய்யவேண்டும். 12வது மாஸிகமும் ஆப்திகமும் சேர்ந்து விட்டால் ஆப்திகத்தை மட்டும் செய்யவேண்டியது.

10) ஸபிண்டீகரணத்திற்கு முன் ஷோடச ச்ராத்தங்களுக்கு ஸங்கல்பம் செய்யும் போதே அந்த வருஷத்திலும் அடுத்த வருஷத்திலும் திதிகளைப் பார்த்து மாஸிகங்களும் ஊனமாஸிகங்களும் எந்த வரிசையாய் வருமோ

அவ்விதம் ஸங்கல்பம் செய்வதுடன் அதிகமாஸமிருந்தால் அதற்காக மாஸிகத்தையும் சேர்த்துக் கொண்டு கணக்கின்படி பிராம்மணர்களை ஏற்படுத்துவது சிலாக்யம். தெரிந்து கொள்ள முடியாத பக்ஷத்தில் எப்படி செய்தாலும் பாதகமில்லை.

11) ஸபிண்டீகரணத்திற்கு முன் ஏகோத்திஷ்டமாகச்செய்து முடிந்து போன மாஸிகங்களை நீக்கி மற்ற மாஸிகங்களை ஷோடசத்தில் சேர்க்கவேண்டியது.

---------------------

## *இரண்டாம் பாகம்*

## 20. த்ரிபுருஷோத்தேச ச்ராத்தமும் ஏகபுருஷோத்தேச ச்ராத்தமும்

1) பிதா, மாதா, ஸபத்னீமாதா, பிதாமஹன், பிதாமஹீ, ப்ரபிதாமஹன், ப்ரபிதாமஹீ, மாதாமஹன், மாதாமஹீ, பத்னீ, பித்ருவ்யன், ஜ்யேஷ்டப்ராதா, ஜனகபிதா, ஜனகமாதா மாமனார், மாமியார் இவர்களுக்கு ச்ராத்தம் த்ரிபுருஷோத்தேசமாய் செய்யவேண்டியது. மற்றவர்களுக்கானால் ஏகோத்தேசமாய் செய்யவேண்டியது.

2) ஸ்திரீகள் செய்யும் ச்ராத்தங்களில் மாமனார், ம்ாமியார், தாய், தகப்பனார், பர்த்தா, மைத்துனன் இவர்கள் சிராத்தங்கள் மட்டும் த்ரிபுருஷோத்தேச்யம். மற்றவைகள் ஏகோத்தேச்யம்.

-------------

## 21 ஹோமமுள்ள சிராத்தங்களும் ஹோமமில்லாதவைகளும்.

1) பிதா, மாதா, ஸபத்னீமாதா, பிதாமஹன், பிதாமஹீ, ப்ரபிதாமஹன், ப்ரபிதாமஹீ, ஸீமன்தஜ ஜ்யேஷ்டன், மாதாமஹன், மாதாமஹீ, பித்ருவ்யன், ஜனகபிதா, ஜனகமாதா இவர்களுடைய சிராத்தத்தில் ஹோமமுண்டு. மற்றவர்கள் ச்ராத்தத்தில் ஹோமமில்லை.

2) ஸ்திரீகள் செய்யும் ச்ராத்தங்களெல்லாவற்றிலும் ஹோமம் கிடையாது.

-----------------------

## 22 சிராத்தம்.

1) தாய், தகப்பன், இவர்களின் சிராத்தங்கள் ஒரே திதியாயிருந்தாலும், திதித்வயத்தால் ஒரே தினத்தில் வந்தாலும், ஆசௌசத்தால் நின்று தீட்டுப்போகும் தினத்தில் சேர்ந்தாலும், ஒரே பாகத்தில் பிதாவின் சிராத்தத்தை முந்தியும் மாதாவின் சிராத்தத்தை பிந்தியும் செய்யவேண்டியது.

2) தகப்பன், ஸபத்னீமாதா, இவர்களின் சிராத்தங்கள் முன் சொல்லிய காரணங்களால் ஒன்று சேர்ந்தால் பிதாவின் சிராத்தத்தை முன் செய்துவிட்டு பின்பு வேறு பாகத்தில் ஸபத்னீமாதாவின் சிராத்தத்தைச் செய்யவேண்டியது.

3) ஆப்திகமும், மாஸிகமும் ஒன்று சேர்ந்தால் ஆப்திகத்தை முந்தியும், மாஸிகத்தை பிந்தியுமாக வெவ்வேறு பாகங்களில் செய்யவேண்டியது.

4) பார்வனமும், ஏகோத்திஷ்டமும் ஒன்று சேர்ந்தால், பார்வணத்தை முந்தியும்,

ஏகோத்திஷ்டத்தை பிந்தியுமாக வெவ்வேறு பாகங்களில் செய்யவேண்டியது.

5) அனேக சிராத்தங்கள் ஒன்று சேர்ந்தால் தகப்பன், தாய், ஸபத்னீமாதா, ப்ராதா, இந்த வரிசையாய் செய்யவேண்டியது. மற்றவைகளை இறந்த வரிசையாய் செய்யவேண்டியது.

6) மாதாபிதாக்களுக்கு க்ருத்யம் செய்து கொண்டிருக்கும் போது ஷெ யார்களின் ஆசௌசத்தால் நின்று போன சிராத்தத்தை ஸபிண்டீகரணத்திற்குப்பிறகு செய்யவேண்டும். மாதாபித்ரு வ்யதிரிக்த க்ருத்ய விஷயத்தில் அந்தரிதமான சிராத்தத்தை ஆத்யச்ராத்தமான பிறகு செய்யவேண்டியது.

7) மாதாபிதாக்களின் ஸபிண்டீகரணத்திற்கு முன் இதரர்களின் சிராத்தத்தை செய்யக்கூடாது. அந்யர்களின் ஸபிண்டீகரணத்திற்கு முன் மாதா பிதாக்கள் வகையறாவின் சிராத்தத்தை செய்ய வேண்டும். மாதாபிதாக்களின் ஸபிண்டீகரணம் காரண வசத்தால் தாமதித்தால் 12வது நாளில் இதரர்களின் சிராத்தத்தை செய்து விடலாம்.

8) ஒருவன் ஒரே நாளில் (ஷண்ணவதி ச்ராத்தங்கள் தவிர) 3 சிராத்தங்கள் செய்யக்கூடாது. செய்யும்படி நேர்ந்தால் 2 சிராத்தங்கள் செய்துவிட்டு மற்றொன்றை சஹோதரனால் செய்விக்க வேண்டியது. சஹோதரன் இல்லாவிடில் தானே மறு நாளில் செய்யவேண்டியது.

9) ஒருவன் ஒரே நாளில் ஒரே பித்ருக்களை உத்தேசித்து 2 சிராத்தங்கள் செய்யக்கூடாது. நைமித்திகங்களானால் செய்யலாம்.

10) ஸ்திரீகள் செய்யும் ச்ராத்தமானது ரஜ: காலத்தினால் மறைக்கப்பட்டால் ஸ்நானம் செய்த

மறு நாளில் அதாவது 5வது தினத்தில் செய்யவேண்டியது. ஸ்நானம் செய்யும் 4வது தினத்தில் பர்தாவின் ம்ருததிதி நேர்ந்தால் அன்று 12 நாழிகைக்கு மேல் ஸ்நானம் செய்து புந: ஸ்நானமும், கோமூத்ரஸ்நானமும் செய்து பஞ்சகவ்ய ப்ராசனம் செய்து அன்றைக்கே பர்த்ரு ச்ராத்தம் செய்யலாம். அதற்கு ப்ரமாணவசனம்- "சதுர்தே திவஸே ப்ராப்தே பர்துர்ம்ருததினம் யதி. புந: ஸ்நாத்வா பஞ்சகவ்யம் பீத்வா ச்ராத்தம் ஸமாசரேத்.

11) ச்ராத்தம் தீட்டினால் நின்று போனால் தீட்டுப்போகும் தினத்தில் செய்யவேண்டியது. வேறு காரணத்தினாலாவது, மறதியினாலாவது விட்டுப்போனால் க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியிலாவது அமாவாஸ்யையிலாவது க்ருச்ராசரணம் செய்து ச்ராத்தம் செய்ய வேண்டியது. மறதியினால் விட்டுப்போய் பச்சாதாபப்படுகிறவன் உடனேயே க்ருச்ராசரணம் செய்து ச்ராத்தம் செய்யலாமென்று சிலர் சொல்கிறார்கள். அதற்கு ப்ரமாணவசனம்- "ப்ரத்யப்தம் ப்ரதிமாஸஞ்ச ம்ருதேsஹனி பித்ருக்ரியா. ததஹர் விஸ்ம்ருதிப்ராப்தௌ தர்சே வா தத்க்ஷணேsபி வா.

12) மாதாபிதாக்கள் இறந்த ஸமீபகாலத்தில் மாதாமஹன் முதலியவர்களிறந்து அவர்களுக்கு கிருத்யம் செய்யும்படி நேர்ந்தால் அவர்களுக்கு ஸபிண்டீகரணத்தை மாதாபிதாக்களின் ஆப்திகத்திற்கு பிறகு செய்யவேண்டியது. சிராத்தங்கள் அநேகமாய் 355வது நாளில் அல்லது 385 வது நாளில் வரும். மாதாபிதாக்களின் ஆப்திகம் 385 வது நாளிலும், மாதாமஹாதிகளின் ஆப்திகம் 355வது நாளிலும் வந்து மாதாபிதாக்களின் ஆப்திகத்துக்கு முன் மாதாமஹாதிகளின் ஆப்திகதிதி வந்தாலும் கூட

மாதாபிதாக்களின் ஆப்திகத்திற்குப் பிறகு தான் மாதாமஹாதிகளின் ஸபிண்டீகரணத்தை செய்யவேண்டும். மறுபடி வேறு ஆப்திகம் கிடையாது.

13) ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் இறந்து போன மாதத்தில் பக்ஷத்தில் திதியில் வருஷந்தோறும் ப்ரத்யாப்திகத்தைச் செய்யவேண்டியது.

14) ஒருதிதி 2 நாளில் வ்யாபித்திருந்தால் அபராண்ஹவ்யாப்தியுள்ள தினத்தில் செய்யவேண்டியது.

15) இரண்டு தினங்களிலும் அபராண்ஹவ்யாப்தி இருந்தால் அதிகமுள்ள தினத்தில் செய்யவேண்டியது.

16) இரண்டு தினங்களிலும் அபராண்ஹவ்யாப்தி சமமாயிருந்தால் முன்தினத்தில் செய்ய வேண்டியது.

17) இரண்டு தினங்களிலும் அபராண்ஹவ்யாப்தி இல்லாவிட்டால் மறுநாள் குதபவ்யாப்தி இருக்குமாதலால் அன்று செய்யவேண்டியது.

18) பகலை ஐந்து பாகமாகச்செய்தால் முதலாவது ப்ராத:காலம், இரண்டாவது ஸங்கவகாலம், 3 வது மாத்யான்ஹிக காலம், 4 அபராண்ஹகாலம், 5வது ஸாயான்ஹமென்று சொல்லப்படுகின்றன. மத்யான்ஹகாலத்தை மூன்று பாகமாகச் செய்தால் முதல் காந்தர்வகாலம், 2வது குதபகாலம், 3வது ரௌஹிணகாலமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

19) ஒரு மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால் பின்வரும் திதியில் சிராத்தம் செய்யவேண்டும். பிந்தியதிதி ஸங்க்ரமணத்தால் துஷ்டமாயிருந்தால் முந்திய திதியில் செய்ய வேண்டியது. முந்திய திதி

துஷ்டமாயிருந்தால் பிந்திய திதியில் செய்ய வேண்டியது.

20) இரண்டு திதிகளுக்கும் தோஷமிருந்தால் பிந்திய திதியில் செய்யவேண்டியது. ஆனாலும் மத்யான்ஹத்திற்கு முன் ஸங்கிரமணமேற்பட்டால் அன்றைக்கு தோஷமில்லை. ஆனால் ஆனி, புரட்டாசி, மார்கழி, தை, பங்குனி, இந்த மாதங்களின் ஸங்க்ரமணம் மத்யான்ஹத்திற்கு முன் ஏற்பட்டால் தோஷமுண்டு. மற்ற மாஸங்களின் ஸங்க்ரமனமானால் தோஷமில்லை.

21) அர்த்தராத்ரிக்கு மேல் ஸங்க்ரமணமானால் அன்றைக்கு தோஷமில்லை. முந்தியானால் தோஷமுண்டு.

22) ஒரு மாஸத்தில் ஒரே திதியானால் எந்த தோஷமிருந்தாலும் அதிலேயே சிராத்தம் செய்யவேண்டும்.

23) ஒரு மாஸத்தில் திதியே இல்லாவிட்டால் முந்தின மாஸத்தில் சாந்த்ராயனப்படி, சுத்த மாஸத் திதியில் செய்யவேண்டியது. பிந்திய மாஸத்தில் செய்யவே கூடாது. சாந்த்ரமானப்படிக்கும் திதியில்லாவிட்டால் மறுமாஸத்திதியில் செய்யவேண்டியது. இதற்கு உதாரணம்- கார்த்திகை மாஸம் முடிவு தினத்தில் அமாவாஸ்யை. மார்கழி மாஸம் முதல் தினத்தில் பிரதமை. மார்கழி மாஸம் முடிவு தினத்தில் சதுர்தசீ, அன்று மகரஸங்க்ரமணம். தைமாஸம் முதல் தினம் அமாவாஸ்யை. மார்கழி மாஸம் அமாவாஸ்யை திதிக்காரர்களுக்கு தைமாஸம் முதல் தேதியில் சிராத்தம் செய்யவேண்டியது. ஏனெனில் மார்கழி மாஸம் முதல் நாள் முதல் தைமாஸத்தின் அமாவாஸ்யை வரையில் மார்கசீர்ஷமானதால் தைமாசம் அமாவாஸ்யையில் செய்யவேண்டியது.

24) சிராத்தத்தில் ஸமானகோத்ரர்கள் நிமந்த்ரணத்திற்கு யோக்கியர்களல்ல. ஸோதகும்ப சிராத்தத்திற்கு பாதகமில்லை.

25) மாதாமஹன் முதலான அந்யகோத்ரிகளுக்கு செய்யும் சிராத்தத்தில் கர்த்தாவினுடையவும் உத்தேச்யனுடையவும் ஸகோத்ரர்கள் நிமந்த்ரணத்திற்கு யோக்யர்களல்ல.

26) சிராத்தத்திற்கு முன் ஒருமாதம், அல்லது ஒருபக்ஷம், வரையில் பரான்னம், க்ஷௌரம் இவைகள் கூடாது. ஸங்கட விஷயத்தில் முதல் நாள், மறு நாள், சிராத்த தினம், இம்மூன்று நாள்களிலாவது பரான்னத்தை விடவேண்டும்.

27) தன்னுடைய மித்திரன், ஆசார்யன், அம்மான், தங்கை, தமக்கை, மாமனார், மாமியார், இவர்களின் அன்னத்திற்கு பரான்ன தோஷமில்லை.

28) வீட்டின் வாசற்படிக்கு எதிரில் 12 அங்குலம் சதுரமாய் விச்வதேவர்களுக்கு மண்டலமும், அதற்குத்தென்புறமாய் 12 அங்குலம். சக்கிரமாய் பித்ருக்களுக்கு மண்டலமும் செய்யவேண்டியது. இரண்டு மண்டலங்களுக்கும் நடுவில் 6 அங்குலம் இடைவெளி இருக்க வேண்டும். காலலம்பிய ஜலங்கள் ஒன்று சேரக்கூடாது. தேவமண்டலத்தில் அக்ஷதையுடன் கூடிய தர்பத்தை கிழக்கு நுனியாகவும், பித்ரு மண்டலத்தில் எள்ளுடன் கூடிய தர்பத்தை தெற்கு நுனியாகவும் போடவேண்டியது.

29) நின்றுகொண்டு காலலம்பக்கூடாது.

30) ஹோமத்தில் மிச்சமான நெய்யினால் பாத்ராபிகாரம், அந்நாபிகாரம் இவைகள்ளை செய்யக்கூடாது.

31) பருப்பு, பால், நெய், தயிர், தேன், இவைகளை தொன்னைகளில் வைத்து அன்னம் வைக்கப்படுகிற பெரிய இலையில் வைக்காமல் பூமியிலேயே வைக்க வேண்டியது.

32) எப்போதும் ஆபோசனம் தானாகவே போட்டுக்கொள்ளக்கூடாது.

33) தர்பபவித்ரபாணியாய் காலலம்பவும், சந்தனம் பூசவுங்கூடாது.

34) மூன்று வஸ்திரங்கள், அல்லது இரண்டு வஸ்திரங்கள், அல்லது ஒரு வஸ்திரமாவது கொடுக்கவேண்டும். வஸ்திரமில்லாத பக்ஷத்தில் யக்ஞோபவீதமாவது கொடுக்க வேண்டும். உபவீதம் கொடுக்காத ச்ராத்தம் நிஷ்பலமாகும்.

35) ச்ராத்த ப்ராம்மணர்களின் காலை கனுக்காலுக்கு மேல் அலம்பக்கூடாது. உள்ளங்காலையும் அலம்பக்கூடாது.

36) சிராத்தத்தில் பாகமெல்லாம் நெய்யினாலேயே செய்யவேண்டும். எவ்விஷயத்திலும் எண்ணையைச்சேர்க்கலாமென்று சொல்லப்பட-வில்லை. எள், தேங்காய் இவைகளை சேர்க்கலாமென்றிருப்பதால் சிலர்கள் நல்லெண்ணையும், சிலர் தேங்காய் எண்ணெயும் சேர்த்து வருவதாக தெரிகிறது.

37) ஏகோத்தேச்யமாய் செய்யப்படும் சிராத்தத்தில் க்ஞாதிகள் பித்ருசேஷ போஜனம் செய்யக்கூடாது.

38) த்ரிராத்ரக்ஞாதிகள் பித்ருசேஷ போஜனம் செய்யக்கூடாது.

39) சிராத்தத்திற்கு யோக்யமான வஸ்துக்கள்:- உளுந்து, கருப்புஎள், சம்பாநெல், கோதுமை, பயறு, கடுகு, கருப்பில்லாத பாகல் (3விதம்) பில்வம், நெல்லி, திராக்ஷை, பலா(2விதம்), மா,

மாதுளை, கடுக்காய், குங்குமப்பூ, கருவேப்பிலை, எலுமிச்சை, வாழை (அனேகவிதம்), இலந்தை (5விதம்), தேங்காய், திப்பிலி, மிளகு, புடலங்காய், முள்கத்திரி, சுக்கு, தேன், நெய், சர்க்கரை, காயம், பச்சைக்கற்பூரம், வெல்லம், கடலுப்பு, வெள்ளரி, பசுவின்பால், அவல், எருமைப்பால் (மத்யமம்), ஜீரகம், சிவப்புக்கொடியுள்ள கூஷ்மாண்டம், கரணைக்கிழங்கு, (2விதம்), சேப்பங்கிழங்கு, கடலை, ஏலம், வெள்ளைப்புஷ்பங்கள், தாமரை, ஜாதிபுஷ்பம், சம்பகம், மல்லிகை, துளசீ, தாழம்பூ, மரு இவைகள் சிராத்த யோக்யமானதுகள்.

40) சிராத்த யோக்யமல்லாத வஸ்துக்கள்:- வரகு, காராமணி, கொள்ளு, கடலை, கருப்புபாகல்காய், பெருங்காயம், துவரை, முருங்கை, பூஷணி, சுரைக்காய், எருமைப்பால், மாதுளை, விளா, காச்சு உப்பு, ஒற்றைக்குளம்புள்ள மிருகத்தின் பால், எலுமிச்சை, புடலங்காய், முளகாய், மோர், மந்தாரை, இவைகள் சிராத்தத்திற்கு யோக்கியமல்லாதவைகள்.

41) விதி, நிஷேதம் இரண்டுகளிலும் சொல்லப்பட்டவைகளை சேர்த்தாலும் சேர்க்கலாம். தள்ளினாலும் தள்ளலாம். போஜனப்ரகரணத்தில் நிஷித்தமான வஸ்துக்களை சிராத்தத்தில் சேர்க்கக்கூடாது.

42) போஜனப்ரகரணத்தில் நிஷேதிக்கப்பட்ட வஸ்துக்களாவது:- உள்ளி, செம்முருங்கை, வெங்காயம், சுரை முள்ளங்கி, கத்திரிக்காய், கன்றுபோட்டு 10 நாளாகாத பசு எருமை இவைகளின் பால், ஆட்டுப்பால், நீர்ச்சேம்பு, வால்நீண்ட கருப்புநெல், நாய்க்கடுகு, சிருகும்மட்டி, தேத்தாங்கொட்டை, கோவை, தும்பைக்கீரை, அத்தி, நெய்க்கசண்டு,

புண்ணாக்கு, நீர்கலக்காத மோர், அப்போது ஆடின எண்ணை, கன்று செத்த பசுவின் பால்.

தானாக ஒழுகி விடும் பசுவின் பால் இவைகள்.

43) சிராத்தத்தில் ப்ராம்ஹணர்கள் போஜனம் செய்த இலைகளை பூமியில் புதைக்கவேண்டுமே அல்லாது வேறுவிதம் செய்யக்கூடாது. வேறுவிதம் செய்தால் சிராத்தம் நஷ்டமாகும்.

44) சிராத்த தினத்தில் சிராத்த க்ருஹத்தில் *இதரர்களுக்கு* சாப்பாடு செய்விக்கக்கூடாது.

45) சிராத்தத்தில் ப்ராம்ஹணர்கள் சாப்பிட்ட இலைகளை ஸ்வஸ்திவாசனத்திற்கு முன் அசைக்க வேண்டியது. பிண்டப்ரதானத்திற்கு பிறகு ஸ்தலத்தை சுத்தி செய்யவேண்டும். (இடம் விஸ்தாரமாக இருந்தால் மாலை வரை இலைகளை வைத்திருந்து பிறகு சுத்தம் செய்யலாம்.)

46) சிராத்தத்தில் பிதாவின் பெயர் (சர்மநாம) தெரியவில்லை என்றால் வரணம் முதலிய இடங்களில் 'ப்ருதிவீஷத்' என்று கூறவும். அவ்வாறே பிதாமஹர், ப்ரபிதாமஹர்களின் பெயர் தெரியாமல் போனால் முறையே 'அந்தரிக்ஷஸத்' 'திவிஷத்' என்று சொல்லவும்.

पित्रादीनां नाम यदा पुत्रैर्न ज्ञायते तदा।
पृथिवीषत् पिता वाच्यः तत्पिता चान्तरिक्षसत्।
अभिधानापरिज्ञाने दिविषत्प्रपितामहः॥

-----------------------------

## 23 ச்ராத்தாங்க தர்பணம்

1) ஹோமத்துடன் செய்கிற சிரார்தங்களுக்கெல்லாம் அங்கபூதமான தர்பணமுண்டு. மாதா, பிதா சிராத்தத்திற்கும், ஸக்ருன்மஹாளயத்திற்கும் அங்கமான தர்பணத்தை மறுநாளிலேயே

செய்யவேண்டியது. இதர சிராத்தாங்கமான தர்பணத்தை அன்றே செய்யவேண்டியது.

2) ஜீவபித்ருகன் செய்யும் சிராத்தங்களில் தர்பணம் கிடையாது.

3) ஸபிண்டீகரணம், அனுமாஸிகம், நாந்தீசிராத்தம், ப்ரதமாப்திகம் இவைகளுக்கு அங்கமாக தர்பணம் கிடையாது என்பது ஆசாரம்.

-----------------------------

## 24 தர்சச்ராத்தம் முதலியவைகள்

1) தர்சமும், சங்க்ரமணமும் ஒன்று சேர்ந்தால் இரண்டையும் அனுஷ்டிக்கவேண்டியது.

2) தர்சம், ஸங்க்ரமணம், அர்தோதயம், அல்லது மஹோதயம், இவைகள் சேர்ந்தால் ஸங்க்ரமணத்தையும், அர்தோதயம், அல்லது மஹோதயத்தையும் அனுஷ்டிக்க வேண்டியது.

3) தர்சம், ஸங்க்ரமணம், க்ரஹணம், இவைகள் சேர்ந்தால், மூன்றையும் அனுஷ்டிக்க வேண்டியது. [சில ஸமயம் ஸங்க்ரமண காலத்தைப் பொருத்து மாறுதலடையும்]

4) பிதா இறந்துபோன வருஷத்தில் தர்சாதி சிராத்தங்களை செய்யக்கூடாது. ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு திலதர்பணத்தை மட்டும் செய்யவேண்டியது.

5) அவிபக்தர்களான ப்ராதாக்கள் தர்சம் முதலிய சிராத்த தினங்களில் வெவ்வேறு இடங்களிலிருந்தால் தனித்தனியே சிராத்த தர்பணாதிகளைச் செய்ய வேண்டியது.

विभक्ता भ्रातरः सर्वे स्वस्वार्जितधनाशनैः।
दर्शाब्दिकादिकं पित्रोः श्राद्धं कुर्युः पृथक् पृथक्॥

-----------------------------

## 25 க்ருத்யம்

1) அபரத்தில் துலஸீ காஷ்டத்தை உபயோகிக்கக் கூடாது.

न दद्यात्कुणपं विप्रः तुलसीकाष्ठवह्निना।
यदि दद्याद्विमोहेन स विष्णोर्दाहको भवेत्॥ [विष्णुधर्मोत्तरे]

2) இறந்தது முதல் 25. நாழிகைக்குள், பகலில் சவத்திற்கு ஸம்ஸ்காரத்தைச்செய்யவும். பகலிலாவது இரவிலாவது சவம் ஸம்ஸ்காரமில்லாமலிருந்தால் அதை பர்யுஷிதமென்கிண்றனர். அதை தஹிப்பதற்கான விதி-- ப்ராம்ஹணர்களிடமிருந்து அனுக்ஞைப் பெற்று 3. க்ருச்ரங்களைச்செய்து பஞ்சகவ்யத்தால் ஸ்நானம் செய்வித்து, பாவமானானுவாகத்தால் அபிமந்த்ரித்த ஜலத்தால் ஸ்நானம் செய்வித்து விதிப்படி தஹனம் செய்யவும்.

3) ப்ராம்ஹமுஹூர்த்தத்திற்கு முன் இறந்த சவம் பர்யுஷிதமாகும். அதின் சுத்திக்காக வைகானஸத்தில் சொல்லிய ப்ராயச்சித்தம் செய்து தஹிக்கவும். [வைகானஸத்தில் சொல்லிய ப்ராயச்சித்தம் -- யாம்ய-பைத்ருக-வைச்வதேவ மந்த்ரங்களினாலும், வ்யஸ்த-ஸமஸ்த வ்யாஹ்ருதிகளினாலும் திலஹோமம்- என்பது.]

गार्ग्यः– पञ्चविंशघटेः पूर्वं दिवा प्रेतस्य संस्कृतिः।
दिवा वा यदि वा रात्रौ शवस्तिष्ठति कर्हिचित्॥
तत्पर्युषितमित्याहुः दहने तस्य का गतिः।
ब्राह्मणेभ्यो विधिं लब्ध्वा कृच्छ्रत्रयमथाचरेत्॥
पञ्चगव्येन संस्नाप्य पावमान्याभिमन्त्र्य च।
जलेन स्नापयित्वा च विधिवद्दहनं चरेत्॥
ब्राह्मान्मुहूर्ताद्यः पूर्वं मृतः पर्युषितो भवेत्।

वैखानसोदितं कार्यं प्रायश्चित्तं विशुद्धये॥
याम्यपैतृकमन्त्राभ्यां वैश्वदेवेन वै तिलान्।
व्यस्ताभिश्च समस्ताभिः हुत्वा व्याहृतिभिर्दहेत्॥
[वैखानसोदिता श्रुतिः- यमो दाधार पृथिवीम्, उशन्तस्त्वा निधीमहि, विश्वेदेवस्य नेतुर्मर्तोवृणीत'' इति॥]

4) புருஷஸந்ததி இல்லாத ஆணுக்கோ பெண்ணுக்கோ அவரது தௌஹித்ரன் (பெண்வயிற்றுப்பேரன்) க்ருத்யம் செய்யலாம். அவனுக்கு பெற்றோர்கள் இருக்கிறார்களே, எப்படி க்ருத்யம் செய்வது? என்று ப்ரமையில் செய்யாமலிருக்கலாகாது. அப்படி செய்யாமலிருந்தால் தோஷமுண்டு.

-----------------------------

## 26. பாலகந்யா மரணவிஷயம்

1) ஆணானாலும், பெண்ணானாலும் 23வது மாதம் பூர்ணமாவதற்குள் இறந்து போனால் அவர்களுக்கு கனன ஸம்ஸ்காரம் செய்யவேண்டியது.

2) 24வது மாதம் முதல் 72வது மாதம் முடிவு வரையில் துஷாக்னியினால் ஏகர்சவிதியாய் (அஸ்மாத்வமதிஜாதோஸி என்ற மந்திரத்தால்) தஹனம் செய்யவேண்டியது. 24வது மாதம் முதல் 36வது மாதம் முடிவு வரையில் திலோதக பிண்டங்களுண்டு. 37வது மாதம் முதல் உபநயனம் வரையில் திலோதக பிண்டங்களும் நாராயணபலியுமுண்டு. உபநயனம் முதல் 12வது வயது வரையில் ஸபிண்டீகரணத்தைத்தவிற மற்ற தஹன ஸஞ்சயன பாஷாண ஸ்தாபன, வாஸோதக பிண்டபலிப்ரதான ஏகோத்திஷ்ட ஷோடசசிராத்த நவசிராத்தங்கள் மந்த்ரவத்தாயுண்டு. 49வது மாதம்

முதல் உபநயன பர்யந்தம் தஹன ஸஞ்சயனங்கள் மந்த்ரமில்லாமல் செய்ய வேண்டியது.

3) புருஷனானாலும், ஸ்த்ரீயானாலும் 12வது வயதிற்குள் விவாஹமாகி விட்டால் ஸபிண்டீகரணாந்தம் ஸர்வமுமுண்டு. 2 வயதுக்குட்பட்ட பெண் விவாஹமாகி மரித்தால் கனனம் செய்து உடனே எடுத்து ஸமந்த்ரகமாய் தஹனாதி ஸபிண்டீகரணாந்தம் எல்லாவற்றையும் செய்யவேண்டியது.

-------------------------

## 27. ஸங்கீர்ண விஷயங்கள்

1) ஜனனாசௌசம் மரணாசௌசம் இவைகளை அனுஷ்டிக்குங்காலத்தில் சந்த்ரஸூர்ய க்ரஹணங்கள் நேர்ந்தால் க்ரஹணம் முடியும் வரையில் சுத்தியுண்டு. ஆனதால் சிராத்த தான தர்பணாதிகளை அனுஷ்டிக்க வேண்டும்.

2) தகப்பனும் பிள்ளைகளும், ஒரே வயிற்றில் பிறந்த ப்ராதாக்களும், ஒரே தினத்தில் வபனம் செய்து கொள்ளக்கூடாது. ஒருவனால் வரிக்கப்பட்டு சிராத்தத்தில் சாப்பிடவும் கூடாது.

3) தீட்டுத் தெரிந்த பின் தீட்டில் சாப்பிட்டால் அன்று முழுவதும் தீட்டைக்கார்க்க வேண்டும். மறுநாளில் தான் தீட்டுப்போகும்.

4) தீட்டுப்போகும் தினத்தில் ஸங்கவகாலம் வந்த பிறகு (6நாழிகைக்கு மேல்) தான் ஸ்நானம் செய்ய வேண்டியது.

5) ஜனனம், மரணம், ரஜஸ், இவைகள் சூர்யோதயத்திற்கு 11 1/4 நாழிகைக்கு முன் ஏற்பட்டால் முதல் நாள் முதல் கணக்கு, பிறகானால் மறுநாள் முதல் கணக்கு.

அருணோதயம் முதல் கணக்கெடுப்பவர்களும் சிலர்.

अर्धरात्रावधिः कालः सूतकादौ विधीयते।,
रात्रिं कुर्यात् त्रिभागं तु द्वौ भागौ पूर्व एव तु॥
उत्तरांशः प्रभातेन युज्यते मृतसूतके।
ऋतौ च सूतके शावे तृतीयांशः परान्वितः॥

6) மாதா கர்பிணியாயிருந்தால் 5 மாஸத்திற்கு மேல் பிள்ளைகளுக்கு உபநயனமும், பெண்களுக்கு விவாஹமும் செய்யக்கூடாது.

7) தகப்பன் அல்லது தமயன் இருந்தால் தர்ஜனியில் வெள்ளியை தரிக்கக்கூடாது.

8) கர்பதீக்ஷையுடையவன், ஸமுத்ர ஸ்நானம் செய்யக்கூடாது. பிணத்தை சுமக்கலாகாது.

9) சண்டாளனுக்கு 32 அடியும், ரஜஸ்வலைக்கு 16 அடியும் விலகவேண்டும்.

10) மாதாபிதாக்களின் சிராத்தம் வருகிற மாஸத்தில் சிராத்தத்திற்கு முன் மஹாளயமாவது மஹாளயதர்பணமாவது செய்யக்கூடாது.

11) க்ருத்யம் செய்து கொண்டிருக்கும் போது பிண்டம் பொங்கும் பாத்திரமோ பிண்டத்ரவ்யமோ மாறினால் மறுபடி முதலிலிருந்து பிண்டபலிகளை செய்யவேண்டும். வாஸோதகத்திற்காக வைத்துக்கொண்டிருக்கும் வஸ்த்ரம் காணாமல் தவறினால் கடந்த வாஸோதகங்களை மறுபடி செய்யவேண்டியது. உதகதானத்திற்காக வைத்துக்கொண்டிருக்கும் சொம்பு காணாமல் தவறினால் கடந்த திலோதகங்களை மறுபடி செய்யவேண்டியது. கர்தா மாறினால் உதகதானம் முதல் யாவற்றும் (வாஸோதகம், திலோதகம், பிண்டபலி, ஏகோத்தரவ்ருத்தி முதலிய ச்ராத்தங்கள்) மறுபடி செய்யவேண்டியது.

நதீதீரகுண்டம் மாறினாலோ, அதிலுள்ள பாஷாணம் காணாமல் போனாலோ கடந்த வாஸோதக திலோதகங்களை மறுபடி செய்யவேண்டியது. க்ருஹத்வாரகுண்டம் மாறினாலோ, அதிலுள்ள பாஷாணம் காணாமல் போனாலோ கடந்த பிண்டோதகங்களை மறுபடி செய்யவேண்டியது.

वस्त्रपाषाणकुम्भानां स्थाल्याः कर्तुर्विपर्यये।
पूर्वदत्तोदकं कुर्यात्पुनरित्याह देवलः॥

उत्तरीयशिलाकुम्भद्रव्यकर्तृविपर्यये।
पूर्वदत्तोदकान् पिण्डान् पुनरित्याह गौतमः॥

12) ஸ்திரீகள் ரஜோதர்சனமானது முதல் 18வது நாளில் ரஜஸ்வலையானால் ஒரு நாள் தீட்டுண்டு. 19வது நாளிலானால் 2 நாள் அசுத்தியுண்டு. அதற்கு மேலானால் 3 நாளுமசுத்தியுண்டு. 15 நாளுக்குள்பட்டிருந்தால் அசுத்தியில்லை. [சில ஸ்த்ரீகளுக்கு உடம்பு வாகை பொறுத்து 17. நாட்களுக்கு முன்பாகவே வெகுவாக ரஜோநிர்கமனமானால் யதோக்தமாக 3. நாள் தர்மத்தை (அசுத்தி) அனுஷ்டிக்க வேண்டும் என்பது ஆசாரம்.]

13) புது ஜலம் வந்தவுடன் 10 நாள்களும், ஆடிமாதம் பிறந்து 3 நாள்களும் நதிகளில் ஸ்நானஞ்செய்யக்கூடாது. ஆனால் உபாகர்ம ஸ்நானம், ப்ரேத ஸ்நானம், க்ரஹண ஸ்நானமிவைகளைச் செய்யலாம்.

14) ப்ரேதத்தின் பின் சென்றாலும், க்ஷௌரம் செய்துகொண்டாலும் புந:ஸ்நானம் செய்யவேண்டியுது.

15) சதுர்த்தீ, அஷ்டமீ, சதுர்தசீ, இவைகளில் 54, ஸப்தமியில் 37, அமா, பூர்ணிமா, ப்ரதமை 36, த்ரயோதசீ, விஷு இவைகளில் 28 என்ற கணக்குடன் ஸாயங்காலத்தில் காயத்ரீஜபம் செய்ய வேண்டியது என்று சொல்வர். எப்போதும் ப்ராத: காலத்தில் 108 காயத்ரீஜபம் செய்ய வேண்டியது. ஆசௌசகாலங்களில் 10 காயத்ரீ ஜபிக்க வேண்டியது.

16) வ்யதீபாதத்தின் 4வது பாதம், அமாவாஸ்யையின் முதல் பாதம், திருவோண நக்ஷத்திரத்தின் மத்யபாகம் இம்மூன்றும், புஷ்யமாஸம் அல்லது மாகமாஸத்தில் ஞாயிற்றுக்கிழமையின் உதயகாலத்தில் சேர்ந்தால் 'அர்தோதயம்' என்றும், திங்கட்கிழமை உதயத்தில் சேர்ந்தால் 'மஹோதயம்' என்றும் சொல்லப்படும்.

17) 8 வயதுக்கு மேற்பட்டு 80 வயதுக்குட்பட்டவர்கள் ஏகாதசியில் உபவாஸமிருக்க வேண்டியது.

18) 4 மாதத்திற்கொருமுறையும், உபாகர்ம தினத்திலும், ஸூதக நிவ்ருத்தியிலும், அறுந்து போன காலத்திலும், வேறு யக்ஞோபவீதம் தரிக்க வேண்டும்.

19) 3 வருஷங்களுக்கு மேற்பட்ட தான்யங்கள் தேவார்ஹமல்ல. ஒரு மாஸத்திற்கு மேற்பட்ட அரிசியும் நைவேத்யார்ஹமல்ல.

20) ஸூர்யக்ரஹண யாமத்திற்கு முன் 4 யாமம் சாப்பிடக்கூடாது. சந்த்ர க்ரஹணத்திற்கு முன் 3யாமம் சாப்பிடக்கூடாது. க்ரஸ்தாஸ்தமன சந்த்ரக்ரஹணத்தில் மறுநாள் சந்த்ரனை பார்த்து ஸ்நானம் செய்த பிறகு தான் சுத்தமாகிறார்கள். க்ரஸ்தாஸ்தமன ஸூர்ய க்ரஹணத்திலும்

அப்படியே. க்ரஸ்தோதய சந்த்ரக்ரஹணத்தில் பகலில் போஜனம் கூடாது.

21) அஷ்டமீ, சதுர்தசீ, அமா, பூர்ணிமா, ஸங்க்ரமணம், யுகாதி, மன்வாதி, ஞாயிற்றுக்கிழமை இவைகளில் ராத்திரியிலும், ஏகாதசியில் அஹோராத்ரமும் போஜனம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது.

22) மேற்கண்ட தினங்களைத் தவிற மற்ற தினங்களில் பரேஹனி தர்பணத்திற்காகவாவது, க்ஞாதி தர்பணத்திற்காகவாவது ராத்ரிபோஜன நிஷேதமாவது பலாஹார நியமமாவது வேண்டியதில்லை.

23) ஸீமன்தஜ புத்ரன், ஸீமன்தஜ புத்ரீ, இவர்களுக்கு ஜ்யேஷ்டமாஸத்தில் உபநயன விவாஹங்கள் கூடாது.

24) ஸந்யாஸிகள் தங்கள் பிள்ளை, பெண்கள் இறந்ததற்கு ஸ்நானம் செய்யக்கூடாது. மாதாபிதாக்கள் இறந்ததாய் கேள்விப்பட்டால் உடனே ஸசேல ஸ்நானம் செய்யவேண்டியது.

25) நிசியில் மூத்ர-புரீஷோத்ஸர்கம் செய்தாலும் பத்னீஸங்கமனம் செய்தாலும் ஆசமனம் செய்து விட்டுத்தான் படுக்கவேண்டும்

26) நிசியில் ஸ்நானம் செய்யக்கூடாது. அப்படிச்செய்ய நேர்ந்தால் அக்னி [தீப] ஸந்நிதியில் செய்யவேண்டியது.

27) ஸுஹ்ருத் பந்துக்களை வழியனுப்பிய பிறகும், பூஜை செய்த பிறகும் ஸ்நானம் பண்ணக்கூடாது.

28) ஞாயிற்றுக்கிழமையிலும், ஸப்தமியிலும், நெல்லிக்காய் சேர்க்கக்கூடாது. ராத்திரியில் நெல்லிக்காய், இஞ்சி, நெல்வருத்த மாவு, இவைகளை உபயோகிக்கக்கூடாது.

29) மஞ்சள், நெய், பொடி, உப்பு, தான்யம், மருந்து, பாக்கு, வெல்லம், இவைகளுக்கு பாகதோஷமில்லை.

30) பரேஹனி தர்பணத்தை ப்ராஹ்ம முஹூர்த்தத்திலெழுந்து ஸ்நானம் செய்த பிறகு செய்துவிட்டு பிறகு தந்ததாவனம் ஸ்நானம் முதலிய யாவற்றும் செய்ய வேண்டியது. ஸூர்யோதயமான பிறகு தர்பணம் செய்யும்படி நேரிட்டால் ஸ்நானம் செய்து ஸந்த்யாவந்தனம் செய்து விட்டு பிறகு செய்யவேண்டியது. பிறகு ஔபாஸனஹோமம் செய்யவேண்டியது.

31) தீர்த்தம், கிழங்கு, நெய், பால், ஹவிஸ், மருந்து, பழம், இவைகளை சாப்பிடுவதினால் வ்ரதபங்கம் நேரிடாது. இதரர்களின் இஷ்டபூர்த்திக்காக சிராத்த போஜனம் செய்தாலும் வ்ரதபங்கம் நேரிடாது.

32) வெண்கலப் பாத்திரத்தில் எடுக்கப்பட்ட இளநீர் கள்ளுக்குச்சமானமாகும்.

33) தேவர்கள், பித்ருக்களுக்கன்னியில் காரணமில்லாமல் திலான்னம், பாயஸம் இவைகளை செய்து சாப்பிடக்கூடாது.

34) தான் மஹாளயம் செய்வதற்கு முன் பிறர் மஹாளயத்தில் வரிக்கப்பட்டு புஜிக்கலாகாது.

35) தாயார் ஜீவித்திருந்தால் மஹாளயத்தில் பிதாமஹ்யாதிகளுக்கு வரணமில்லை. ஆனால் பிண்டதர்பணங்கள் உண்டு.

36) பிதா, ப்ராதா, ஒருவருமில்லாதவனுக்கு அன்னியன் உபநயனம் செய்யும் பக்ஷத்தில் அவனே நாந்தீசிராத்தம் செய்யவேண்டியது. உபநயனம் செய்யப்படுகிறவனுடைய பித்ராதிகள் சிராத்த தேவதைகளாவார்கள்.

37) பிதா, ப்ராதா இல்லாத மாணவகனுக்கு அன்னியன் ப்ராஜாபத்யாதி வ்ரதஸமாபனத்தில் ஆசார்யனானால் அந்த நாந்தீ சிராத்தத்தில் ஆசார்யனுடைய பித்ராதிகள் சிராத்த தேவதைகளாவார்கள்.

38) சிராத்த கர்த்தாவுக்கு ஏகாதசியில் உபவாஸ நியமமில்லை. பித்ருசேஷ போஜனம் அவச்யம் செய்யவேண்டும்.

39) கிராமத்திற்குள் சவமிருந்தால் ஹோமம் செய்தலும், சமையல் செய்தலும், சாப்பிடுதலும் கூடாது. ஆனால் 11 வில்கடை அளவுக்கு ஒதுங்கின வேறு வீதியில் முன் சொல்லியவைகளை செய்யலாம். ஒரு வில்கடை 8-அடி.

40) ஸந்யாஸியின் சவம் க்ராமத்திற்குள்ளிருந்தால் யாதொரு தோஷமுமில்லை. ஹோமம் முதலியவைகளைச் செய்யலாம்.

41) சூத்ரசவம் கிராமத்திற்குள்ளிருந்தால் அது இருக்கும் வீட்டுக்கு மாத்திரம் தோஷமுண்டு. மற்ற க்ருஹங்களுக்கு தோஷமில்லை.

42) 400- பிராம்ஹணர்களுள்ள ஊரில் 11 வில்கடை தூரமில்லாவிட்டாலும், நாராசத்தால் பிரிக்கப்பட்ட வேறு வீதியில் தோஷமில்லை.

43) 1000- பிராம்ஹணர்களுள்ள ஊரில் ஒரே கூரையாயிருக்கும் பக்ஷத்தில் 30 வில்கடைக்கு மேல்பட்டால் தோஷமே இல்லை.

44) பட்டணங்களுக்கு அந்தச்சவத்வ தோஷமில்லை.

45) சாப்பிடும் போது பூர்வாபோசன ஜலத்தை முழுவதும் சாப்பிடவேண்டியது. உத்தராபோசன

ஜலத்தை பாதி உட்கொண்டு பாதியை பூமியில் விடவேண்டியது.

46) மூத்ரசௌசத்தில் 4 தடவை, மலசௌசத்தில் 8 தடவை, போஜனமான பின் 12 தடவை, தந்ததாவனமான பின் 16 தடவையும் கண்டூஷம் செய்ய வேண்டும்.

47) தன் வீட்டில் கிழக்கில் தலைவைத்தும், மாமனார் வீட்டில் தெற்கே தலைவைத்தும், யாத்ரையில் மேற்கே தலைவைத்தும் படுக்க வேண்டியது, ஒருக்காலும் வடக்கே தலைவைத்துப் படுக்கக்கூடாது.

48) கர்ணே புஷ்பம், களே கந்தம் சிகாயாம் துளசீதளம். மோஹாத்தாரயதே விப்ர: ஸ வை சூத்ரோ ந ஸம்சய:

49) தேவாந் நதீம் ஸபாம் வ்ருக்ஷாநக்னிகார்யம் ததா யதிம். தண்டவத் ப்ரணமேத் பூமௌ நாபிவாதனமாசரேத்.

50) ஸீமந்த- வ்ரத- சௌள- நாமகரணா-ன்னப்ராசநோ-பாயன- ஸ்நானா-தான-விவாஹ-யக்ஞ-தனயோத்பத்தி- ப்ரதிஷ்டாஸு ச.

பும்ஸூத்யா-வஸதப்ரவேசன- ஸூதாஸ்யாத்யாவலோகா- ச்ரமஸ்வீகார- க்ஷிதிபாபிஷேக- தயிதாத்யர்தௌ ச நாந்தீமுகம்.

51) ஸ்திரீகளை நமஸ்காரம் செய்தால் அபிவாதனம் செய்யக்கூடாது.

52) அதிக்ராந்தாசௌசத்திற்கு வாஸோதகமில்லை.

53) மஹாளய சிராத்தத்தை அன்னரூபமாய் செய்கிறவர்களும், ஹிரண்யரூபமாய் செய்கிறவர்களும் ப்ரதிவர்ஷமும் அவ்விதமே செய்யவேண்டுமென்ற நியமமில்லை. தேசகால

சக்த்யனுசாரமாய் மாற்றிச்செய்வதால் தோஷமில்லை.

54) புத்ரனில்லாத விதுரன் மஹாளய சிராத்தத்தை அமாவாஸ்யையிலும் செய்யலாம்.

55) பர்வதினத்தில் ப்ரத்யாப்திக சிராத்தம் க்ரஹணத்தால் நிஷேதிக்கப்பட்டு மறுநாள் செய்ய வேண்டி வரும் விஷயத்தில் பர்வதினத்தில் ப்ரத்யாப்திக சிராத்தத்தை ஹிரண்யரூபமாய் செய்ய வேண்டியது. அதற்கு அங்கமாய் தர்ப்பணம் கிடையாது.

56) மாதா ஜீவித்திருந்தால் மஹாளயத்தில் மாத்ருவர்கத்திற்கு வரணமில்லை. ஸபத்னீமாதா இறந்து போயிருந்தால் வரணமுண்டு. இரண்டு மாதாக்களும் இறந்து போயிருந்தால் ஸபத்னீ மாதாவுக்குத் தனியாய் வரணமுண்டு.

57) ஸந்யாஸியின் மஹாளயத்தை த்வாதசியிலேயே செய்யவேண்டியது. மற்ற திதிகளில் செய்யக்கூடாது. ஆனால் த்வாதசியில் ஸந்யாஸியில்லாத மற்றவர்களுக்கும் செய்யலாம்.

58) சஸ்திரஹதர்களுக்கும் துர்மரணமடைந்தவர் களுக்கும் சதுர்தசியிலேயே மஹாளயம் செய்யவேண்டியது. வேறு திதியில் செய்யக்கூடாது.

59) மாதாமஹாதிகளை ஸபத்னீகர்களாக வரிக்க வேண்டும். மாதாமஹ்யாதிகளுக்கு தனியாய் வரணம் செய்யக்கூடாது.

60) நாந்தீசிராத்தத்தில் ஒவ்வொரு வரணத்திற்கும் இரண்டு பிராம்ஹணர்களை வரிக்க வேண்டியது. 'அஸ்மின் நாந்தீமுகச்ராத்தே 'நாந்தீமுக பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹானாம்' என்றே எல்லா ஸூத்ரகாரர்களும் சொல்லனும். ஸ்ம்ருதி க்ரந்தங்களிலும் பாஷ்ய-வ்யாக்யானங்களிலும் ப்ரமாணம் கொடுக்கப்பட்டுள்ளது.

61) நாந்தியில் மாத்ரு வரணம் முதலில் செய்ய வேண்டியது. பிறகு பித்ரு வரணம் செய்ய வேண்டியது.

62) நாந்தீச்ராத்தத்தை பூர்வாஹ்ணத்திலேயே செய்யவேண்டும்.

63) குரு ஸிம்ஹராசியிலிருக்கும் போது (மகாமகவருஷத்தில்) விவாஹம் செய்யக்கூடாது. [இது உத்தரபாரத விஷயம்]

64) ஆசௌசமுள்ள ஒருவன் பலத்த வியாதியினால் ஆசௌசம் போகும் தினத்தில் ஸ்நானம் செய்ய முடியா விட்டால் அவனுக்காக வேறொருவன் 10 தடவை ஸ்நானமும் ஆசமனமும் செய்யவேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ஆசௌசியைத் தொட்டு விட்டு ஸ்நானம் செய்யவேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ஆசௌசியானவன் வெவ்வேறு சுத்தவஸ்திரம் தரிக்க வேண்டும். இப்படிச்செய்த பிறகு புண்யாஹவாசனத்தால் சுத்தனாகிறான்.

65) ரஜஸ்வலையான ஸ்த்ரீ 4வது தினத்தில் ரோகத்தினால் ஸ்நானம் செய்ய முடியாவிட்டால் முன்பாராவில் சொல்லியபடி வேறொரு ஸ்த்ரீயைக்கொண்டு 12 தடவை ஸ்நானஞ்செய்விக்க வேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ரஜஸ்வலை வேறு சுத்தவஸ்திரம் தரிக்க வேண்டியது. பிறகு யதாசக்தி தானத்தாலும், புண்யாஹ வாசனத்தினாலும் சுத்தையாகி விடுகிறாள்.

66) ஆசௌசத்திலும் ஸந்த்யாவன்தனம் அவச்யம் செய்யவேண்டும். விபூதியும் இட்டுக்கொள்ளனும்.

67) ச்ராத்த தினத்தன்று ச்ராத்தமான பின் ச்ராத்தசேஷத்தால் வைச்வதேவம் செய்யவேண்டும்.

--------------------

## 28. ஆஹிதாக்னிவிஷயம்

முன்சொல்லிய ஆசௌசம், ஸம்ஸ்காரம் முதலிய விஷயங்கள் ஆஹிதாக்னி விஷயத்தில் சிலவிடங்களில் மாறுதலடையும். அவைகளைப்பற்றி இங்கு ஒன்றும் சொல்லப்படவில்லை.

## 29. பொது

மேற்கண்ட விஷயங்களில் செய்ய வேண்டியவை களைச்செய்யாவிடினும், செய்யக்கூடாதவைகளைச் செய்தாலும் கர்மங்கள் நிஷ்பலமாகும்; மஹாதோஷமுண்டு. அவைகளுக்குச் சொல்லப் பட்டிருக்கும் ப்ராயச்சித்தங்களைச் செய்ய வேண்டும்.

## 30. ஆசௌசத்தில் ஸந்த்யாவிதி

ஆசௌசத்திலும் ஸந்த்யாவன்தனம் செய்ய வேண்டியது. ஆனால் மந்த்ரங்களை மனஸால் உச்சரிக்கனும். ப்ராணாயாமத்தை மட்டும் மந்த்ரமில்லாமல் செய்ய வேண்டியது. காயத்ரீஜபம் 10. மட்டும்தான். மற்றவை ஸமானம்.

## பின் வரும் அட்டவணையில் முக்கிய கவனிப்பு.

யாருக்கு ஹோமமோ, யாருக்கு வரணமோ, எவரின் பிண்டத்துடன் ஸம்யோஜனமோ, அந்த பேர்வழி பிழைத்திருந்தால் அவனுக்கு முந்தின பேர்வழியை ஊஹித்துச் சொல்ல வேண்டியது. 7, 11, 14, 24, 25, 26, விஷயங்களில் 'யன்மே மாதா" என்றே சொன்னாலும் சொல்லலாம்.

11-வது கலத்தில் ஜ்யேஷ்டப்ராதா என்பது ஸீமந்தஜன் அஸீமந்தஜன் இருவரையும் குறிக்கும்.

********

## 31.ஷட்பிண்டிகளுக்கு ஸபிண்டீகரணத்தில் வரணம், ஹோமம், பிண்டஸம்யோஜனம் இவைகளைக்குறிக்கும் அட்டவணை புருஷர்களுக்கு கர்த்ருத்வம் ஏற்பட்டால்,

| வ. எண் | இறந்தவர் | ஹோமமந்த்ரம் | எவர்களுக்கு ஹோமம் | எவர்களுக்கு வரணம் | எவர்களின் பிண்டத்துடன் சம்யோஜனம் | பாதேயம் |
|---|---|---|---|---|---|---|
| 1 | பிதா | यन्मे पितुर्माता | பிது: பித்ராதிகள் | தத்வத் | பிது: பித்ராதிகள் | உண்டு |
| 2 | மாதா | यन्मे माता | பித்ராதிகள் | தத்வத் | பிதாமஹ்யாதிகள் | உண்டு |
| 3 | பிதாமஹ: | यन्मे पितामहस्य माता | பிதாமஹஸ்ய பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 4 | பிதாமஹீ | यन्मे पितुर्माता | பிது: பித்ராதிகள் | தத்வத் | பிது: பிதாமஹ்யாதிகள் | உண்டு |
| 5 | ப்ரபிதாமஹ: | यन्मे प्रपितामहस्य माता | ப்ரபிதாமஹஸ்ய பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 6 | ப்ரபிதாமஹீ | यन्मे पितामहस्य माता | பிதாமஹஸ்ய பித்ராதிகள் | தத்வத் | பிது: ப்ரபிதா - மஹ்யாதிகள் | உண்டு |
| 7 | ஸபத்னீ மாதா | यन्मे सपत्नीमाता | பித்ராதிகள் | தத்வத் | பிதாமஹ்யாதிகள் | உண்டு |
| 8 | பித்ருவ்ய: | यन्मे पितृव्यस्य माता | பித்ருவ்யஸ்ய பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 9 | மாதாமஹ: | यन्मे माताहस्य माता | மாதாமஹஸ்ய பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 10 | மாதாமஹீ | यन्मे मातुर्माता | மாது: பித்ராதிகள் | தத்வத் | மாது: பிதாமஹ்யாதிகள் | உண்டு |
| 11 | ஜ்யேஷ்ட ப்ராதா | यन्मे ज्येष्ठ भ्रातुर्माता | ப்ராது: பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 12 | ஜனகபிதா | यन्मे जनक पितुर्माता | ஜனகஸ்ய பிது: பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 13 | ஜனகமாதா | यन्मे जनकमाता | ஜனக பித்ராதிகள் | தத்வத் | ஜனக பிதாமஹ்யாதிகள் | உண்டு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 14 | ஜனக ஜ்யேஷ்டன் | यन्मे जनकज्येष्ठ भ्रातुर्माता | ஜனக பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 15 | பத்னீ | यन्मे माता | பித்ராதிகள் | தத்வத் | மாத்ராதிகள் | உண்டு |
| 16 | மாமனார் | यन्मे भार्यायाः पितुर्माता | பார்யா: பிது: பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |
| 17 | மாமியார் | यन्मे भार्याया माता | பார்யாயா: பித்ராதிகள் | தத்வத் | பார்யாயா: பிதாமஹ்யாதி | உண்டு |
| 18 | பித்ருவ்ய பத்னீ | यन्मे पितृव्यस्य माता | பித்ருவ்யஸ்ய பித்ராதிகள் | பித்ருவ்யதத் பித்ரு பிதாமஹா: | பர்தா | இல்லை |
| 19 | பித்ரு பகினீ | यन्मे पितृभगिनी भर्तुर्माता | பித்ருபகினீ பர்து:பித்ராதிகள் | பித்ருபகினீ பர்த்ருதத் பித்ரு பிதமஹா: | பர்தா | இல்லை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 20 | மாத்ரு பகினீ | यन्मे मातृभगिनी भर्तुर्माता | மாத்ருபகினீ பர்து: பித்ராதிகள் | மாத்ருபகினீ பர்த்ருதத் பித்ரு பிதமஹா: | பர்தா | இல்லை |
| 21 | பகினீ | यन्मे भगिन्या भर्तुर्माता | பகினீபர்து: பித்ராதிகள் | பகின்யா பர்த்ருதத் பித்ருபிதாமஹா: | பர்தா | இல்லை |
| 22 | மாதுல: | यन्मे मातुलस्य माता | மாதுலஸ்ய பித்ராதிகள் | தத்வத் | பிதா | இல்லை |
| 23 | மாதுலானீ | यन्मे मातुलस्य माता | மாதுலஸ்ய பித்ராதிகள் | மாதுலதத் பித்ருபிதாமஹா: | பர்தா | இல்லை |
| 24 | ப்ராத்ரு பத்னீ | यन्मे भ्रातृपत्न्या भर्तुर्माता | ப்ராத்ருபத்ன்யா பர்த்து: பித்ராதிகள் | ப்ராத்ருபத்ன்யா பர்த்ருதத்பித்ரு பிதாமஹா: | பர்தா | இல்லை |
| 25 | கனிஷ்ட ப்ராதா | यन्मे कनिष्ठ भ्रातुर्माता | ப்ராது: பித்ராதிகள் | தத்வத் | பிதா | இல்லை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 26 | புத்ர: | यन्मे पुत्रस्य पितुर्माता | புத்ரஸ்ய பிது: பித்ராதிகள் | தத்வத் | புத்ரஸ்ய பிது:பிதா | இல்லை |
| 27 | ஸபிண்ட ஸமானோதக புருஷர்கள் | यन्मे शर्मणो ज्ञातिभूतस्य माता | க்ஞாதிபூதஸ்ய பித்ராதிகள் | தத்வத் | க்ஞாதி பூதஸ்ய பிதா | இல்லை |
| 28 | மேற்படி ஸ்த்ரீகள் | यन्मे नाम्न्या ज्ञाति भूताया भर्तुर्माता | மேற்படி பர்து: பித்ராதிகள் | மேற்படி பர்த்ருதத் பித்ரு பிதாமஹர்கள் | பர்தா | இல்லை |
| 29 | மற்ற ஸகல புருஷர்கள் | यन्मे शर्मणो वन्धोर्माता | மேற்படி பித்ராதிகள் | தத்வத் | மேற்படி பிதா | இல்லை |
| 30 | மேற்படி ஸ்த்ரீகள் | यन्मे नाम्न्या वन्धोर्भर्तुर्माता | மேற்படி பர்து: பித்ராதிகள் | மேற்படி பர்த்ராதிகள் | மேற்படி பர்தா | இல்லை |

## 32. ஸ்த்ரீகளுக்கு கர்த்ருத்வம் ஏற்படுகிற விஷயத்தில்

| வ. எ ண் | இறந்தவர் | ஹோமமந்த்ரம் | எவர்களுக்கு ஹோமம் | எவர்களுக்கு வரணம் | எவர்களின் பிண்டத்துடன் சம்யோஜனம் | பாதேயம் |
|---|---|---|---|---|---|---|
| 1 | பர்தா | यन्मे भर्तुर्माता | பர்து: பித்ராதிகள் | தத்வத் | பர்து: பித்ராதிகள் | உண்டு |
| 2 | பிதா | यन्मे पितुर्माता | பிது: பித்ராதிகள் | தத்வத் | பிதாமஹாதிகள் | உண்டு |
| 3 | மாதா | यन्मे माता | பித்ராதிகள் | தத்வத் | பிதாமஹ்யாதிகள் | உண்டு |
| 4 | மாமனார் | यन्मे भर्तुः पितुर्माता | பர்து: பிது: பித்ராதிகள் | தத்வத் | பர்து: பிதாமஹாதிகள் | உண்டு |
| 5 | மாமியார் | यन्मे भर्तुर्माता | பர்து: பித்ராதிகள் | தத்வத் | பர்து: பிதாமஹ்யாதிகள் | உண்டு |
| 6 | மச்சினன் | यन्मे भर्तुर्माता | பர்து: பித்ராதிகள் | தத்வத் | தத்வத் | உண்டு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 7 | மற்ற புருஷர்கள் | यन्मे शर्मणो ज्ञाति भूतस्य அல்லது बन्धोर्माता | தத்பித்ராதிகள் | தத்வத் | தத்பிதா | இல்லை |
| 8 | மற்ற ஸ்த்ரீகள் | यन्मे नाम्न्या ज्ञाति भूतायाः அல்லது बन्धोर्भर्तुर्माता | தத்பர்துঃ பித்ராதிகள் | தத் பர்த்ராதிகள் | தத்பர்தா | இல்லை |

-------------

नाम्नोऽस्ति यावती शक्तिः पापनिर्हरणे हरेः।
तावत्कर्तुं न शक्नोति पातकं पातकी जनः॥
हरिर्हरति पापानि दुष्टचित्तैरपि स्मृतः।
अनिच्छयापि संस्पृष्टो दहत्येव हि पावकः॥
शिव शङ्कर रुद्रेश नीलकण्ठ त्रिलोचन ।
इतीरयन्ति ये नित्यं न कलिर्बाधते च तान्॥
महादेव विरूपाक्ष गङ्गाधर मृडाव्यय ।
इतीरयन्ति ये नित्यं ते कृतार्था न संशयः॥
अग्निचित्कपिला राजा सती भिक्षुर्महोदधिः।
दृष्टमात्राः पुनन्त्येते तस्मात्पश्येत नित्यशः॥
व्रजे वसन्तं नवनीतचोरं गोपाङ्गनानां च दुकूलचोरम्।
अनेकजन्मार्जितपापचोरं चोराग्रगण्यं पुरुषं नमामि॥
समस्तसम्पत्समवाप्तिहेतवः समुत्थितापत्कुलधूमकेतवः।
अपारसंसारसमुद्रसेतवः पुनन्तु मां ब्राह्मणपादपांसवः॥

*********

ஆசௌசநிர்ணயம் என்னும் க்ரந்தம் முற்றிற்று.

श्रीकृष्णार्पणमस्तु

